# சத்துமிகுந்த, சுவையான பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்




## வளரும் குழந்தைகளுக்கு சுவையான துணை

பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள் அருமையான தனிச் சுவையோடு மேம்பட்டு விளங்குவது ஏன்? சத்துச் செறிந்த ஆரோக்கியமான குணச்சிறப்பே காரணம். ஆசையோடு குழந்தைகள் அவற்றை விரும்பிச் சுவைத்து வளருகின்றனர்! பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்— வளரும் குழந்தைகளுக்குச் சுவையான துணை.

பிரிட்டானியா

பிஸ்கட்டுகள் மிகச் சிறந்தவை

லின்டாஸ்-BBC.GLX 6-140 TM

# இதோ! இல்லத்தரசிகள் எதிர் பார்த்த மிகச்சிறந்த **ஸீகாம்** மிக்ஸர்-கிரைண்டர்




ஸீகாம். மின்சார மிக்ஸர்
350 வாட் சக்தி வாய்ந்த
மோட்டாரிலிருந்து மூன்று
வேகங்களில் இயங்கக்
கூடியது. தொடர்ந்து
45 நிமிடங்கள் வேலை
செய்ய வல்லது. எவர்
ஸில்வர் ஜாடியுடனும்
கிடைக்கும்.
ஒரு வருட உத்தரவாதம்

**பெஸ்ட் & கிராம்ப்டன்**
**இஞ்ஜினியரிங் லிட்**

பதிவு அலுவலகம்:
13/15, செகண்டு லைன்
பீச், சென்னை-600 001

கிளை அலுவலகங்கள்:
பெங்களூர் • பம்பாய்
கல்கத்தா • கோயம்புத்தூர்
எர்ணாகுளம் • மதுரை
புதுடெல்லி • செகந்திராபாத்
திருச்சிராப்பள்ளி
விஜயவாடா • விசாக
பட்டிணம்.

BC.2958 Tam (a)



**வாலிப - வயோதிக அன்பர்களே,**

வாலிப வயதில் செய்கிற தவறுதல்களே இப்போது உடல் கெட்டு பலவீனமடைந்து ரத்தக் குறைவு, சோர்வு, தலைவலி, உஷ்ணம், சோம்பல், கைகால் அசதி, பலவீனம், உடல்வலி, தூக்கக் குறைவு, ஆயாசம், களைப்பு, பீதி, வெட்கம், பயம், வெறுப்பு உண்டாகி மன வேதனையும் கஷ்டமும் அடைந்து வாழ்கிறார்கள். 78 வருட அனுபவம் பெற்ற நமது மருந்துகள் சாப்பிட்டுவர புத்துணர்ச்சி பெற்று நிம்மதியான வாழ்க்கை வாழலாம். வி. பி. பி.யில் பெற உடன் எழுதுக.

**ஒரு மாத மருந்துகள்**

**மிக உயர்தரம் செட் ரூ. 90. தங்க பஸ்பம், சிட்டுக்குருவி லேகியம் 60 வேளை – ரூ. 120**
**30 வேளை ரூ. 60.** போஸ்டேஜ் இலவசம். நேரில் ஆலோசனை பெற.

**1ந் தேதி நெல்லை :** நெல்லை லாட்ஜ், காலை 8 மணி முதல் 12 வரை
**1ந் தேதி நாகர்கோவில் :** ஸ்ரீ உடுப்பி கிருஷ்ணா பவன், பிற்பகல் 2 மணி முதல் 4 மணி வரை
**2ந் தேதி மதுரை :** மணீஸ் கபே, காலை 8 மணி முதல் 2 மணி வரை
**2ந் தேதி புதுக்கோட்டை :** வஸந்தா லாட்ஜ், மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை
**3ந் தேதி காரைக்குடி :** A. V. M. P. L. ரெஸ்ட் ஹவுஸ், காலை 9 மணி முதல் 11 மணி வரை
**3ந் தேதி பட்டுக்கோட்டை :** அசோகா லாட்ஜ், பிற்பகல் 2 மணி முதல் 3-30 மணி வரை
**3ந் தேதி மன்னார்குடி :** மன்னை லாட்ஜ், மாலை 4-30 முதல் 6 மணி வரை
**4ந் தேதி திருச்சி :** ஹோட்டல் அஜந்தா, காலை 8 முதல் 2 மணி வரை
**4ந் தேதி கரூர் :** பெரியார் லாட்ஜ், மாலை 4 மணி முதல் 5-30 வரை
**5ந் தேதி தஞ்சாவூர் :** ராஜா ரெஸ்ட் ஹவுஸ், காலை 10 மணி முதல் 12 மணி வரை
**5ந் தேதி திருவாரூர் :** அபூபக்கர் பில்டிங், மாலை 2 முதல் 4 மணி வரை
**5ந் தேதி நாகப்பட்டினம் :** தினகர் விலாஸ், மாலை 5 முதல் 6 மணி வரை
**6ந் தேதி காரைக்கால் :** அசோக் லாட்ஜ், காலை 8 முதல் 10 மணி வரை
**6ந் தேதி கும்பகோணம் :** தாஜ்மஹால் லாட்ஜ், பகல் 12 மணி முதல் 2 மணி வரை
**6ந் தேதி மாயவரம் :** காளியாகுடி லாட்ஜ், மாலை 3 மணி முதல் 4-30 மணி வரை
**6ந் தேதி சிதம்பரம் :** ஜெயராம் லாட்ஜ், மாலை 5-30 மணி முதல் 7 மணி வரை
**7ந் தேதி பாண்டிச்சேரி :** அருணா லாட்ஜ், காலை 8 மணி முதல் 9-30 மணி வரை
**7ந் தேதி கடலூர் N. T. :** ஹோட்டல் பிருந்தாவனம், காலை 10-30 மணி முதல் 12 மணி வரை

கிளை : **41, நைனியப்பன், தெரு, மண்ணடி, சென்னை-1** போன் : **21448**

வைத்திய திலகம், வைத்தியராஜ் : **டாக்டர் எஸ். காளிமுத்து** R. M. P. (Ind.) V. V. C., A. M. I. H.

**பழனி சித்தர் வைத்தியசாலை (Regd.) பழனி-624 601**

போன் : 316, 316A, வீடு : 420. பழைய தாராபுரம் ரோடு, பழனி. தந்தி : "சித்தர்"



# கல்கி

ராக்ஷஸ
மாசி 17
பிப்ரவரி 29
1976




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் வரும் பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே


## குடும்பத்தினர் அனைவரும் ஆரோக்கியத்துடன் திகழ 2 ஃபாஸ்ஃபோமின் டானிக்







### ஃபாஸ்ஃபோமின் அயன்
**பெண்களுக்கான அயன் டானிக்**

ஃபாஸ்ஃபோமின் அயன் சத்துமிக்கச் சிவப்பு இரத்தம் உருவாகக் காரணமாயிருந்து உதவுவதுடன் உடலில் அயன் சத்தைச் சமநிலையில் பெற்றிருக்கவும் உதவுகிறது. இதில் பி காம்ப்ளெக்ஸ் விடமின்களும் பல்வேறு கிளிஸரோபாஸ்பேட்டுகளும் கூட அடங்கியுள்ளது. சக்தியும் ஆரோக்கியமும் பெற்றுத் திகழ உதவுவதுடன் களைப்பையும் விரட்டுகிறது. பெண்களுக்கென்று விசேஷ முறையில் உருவாக்கப்பட்டுள்ள முதல் டானிக்—ஃபாஸ்ஃபோமின் அயன்.

### ஃபாஸ்ஃபோமின் விடமின்
**குடும்பத்திற்கான விடமின் டானிக்**

பழரச மணம் கமழும் சிறந்த டானிக். ஆரோக்கிய முழுமையோடு உணவு நிறைவைக் கூட்டுகிறது. உங்கள் குடும்பத்தினர் யாவரும் ஆரோக்கியத்துடன் சுறுசுறுப்பாயத் திகழச் செய்ய, மிக அவசியமான பி காம்ப்ளெக்ஸ் விடமின்கள் மற்றும் பல்வேறு கிளிஸரோபாஸ்பேட்டுகள் அடங்கியது. குடும்பம் முழுவதும் அருந்தி ஆரோக்கியத்துடன் மகிழ—ஃபாஸ்ஃபோமின் விடமின்.



ஃபாஸ்ஃபோமின் டானிக்குகள்—பசியைத் தூண்டி,
வலிவு, நோயெதிர்ப்புச் சக்தி கூட்டுவன!

Squibb SARABHAI CHEMICALS LTD.

ஈ.ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்பரேட்டட் அவர்களின் ரெஜிஸ்டர்ட் டிரேட் மார்க்குகள். ஸாராபாய் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.


காப்பி
அடிக்க
முடியாதது!
ஜீவனுள்ள ஒரே காபி
நரசுஸ்
"தெர்மலோ"காபி
''தெர்மலோ'' முறை தயாரிப்பு
நரசுஸ் காபியின் தனிச் சிறப்பு.
நற்சுவை மிகுந்தது.
நறுமணம் கொண்டது.
நாளும் புதியது.
நரசுஸ் காபி!
தயாரித்த 24 மணி
நேரத்திற்குள்
தமிழகத்தில் உள்ள எங்கள்
எல்லா கிளைகளின் மூலம்
வினியோகம்
செய்யப்படுகிறது.
நரசுஸ் காபி கம்பெனி.
சேலம்-636 007
கிளைகள்:- பாண்டிச்சேரி &
தமிழகமெங்கும்.
ADWAVE/NCC 410 TAM

கல்கி

மலர் 35

இதழ் 31

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# சந்தானம் கூறும் சத்தான கருத்துக்கள்

மூதுபெரும் அரசியல் ஞானியும், தியாகசீலரும், பொருளாதார நிபுணருமான திரு க. சந்தானம் சுயராஜ்யா ஆண்டு மலரில் அரியதொரு கட்டுரை எழுதியிருக்கிறார். காந்திஜி, ராஜாஜி, நேருஜி ஆகியோருடன் இணைந்து செயலாற்றி அவர்களது நன் மதிப்பைப் பெற்றவரும், சுதந்திர பாரதத்தில் பல பெரிய பொறுப்புக்களைத் திறம்பட வகித்தவருமான அவர் கூறுவதைக் கவனிக்கச் சர்க்காரும் மக்களும் கடமைப்பட்டுள்ளனர்.

தேசத்தின் துரிதமான பொருளாதார மேம்பாட்டுக்கு ஆறு அம்சத் திட்டம் ஒன்று வழங்குகிறார் சந்தானம்.

பொருளாதார முன்னேற்றம் என்பது என்ன? அடிப்படையில் இது ஏழைமையை ஒழிப்பதுதான். ஏழைமையை எப்படி ஒழிப்பது? இருப்பவனிடமிருந்து பிடுங்கி இல்லாதவனுக்குக் கொடுப்பதன் மூலம் ஏழைமையை ஒழிக்கவே முடியாது. மேன் மேலும் வரிகளை விதிப்பதன் மூலமோ கட்டுப்பாடுகளை அதிகரிப்பதன் மூலமோ தரித்திர நாராயணன் விடைபெற மாட்டான்.

**ஏழைமை ஒழிய ஒரே வழி அனைவருக்கும் வேலைவாய்ப்பு கிட்டச் செய்வதுதான் என்கிறார் சந்தானம்.**

அந்த வேலை வாய்ப்புக்களைச் சர்க்கார் துறை அளிக்கிறதா, தனியார் துறை அளிக்கிறதா என்பதெல்லாம் முக்கியமல்ல. வேலை வாய்ப்புக்கள் பெருக அனுசரணையான கொள்கைகளை அரசாங்கம் உருவாக்கி அமுல்படுத்த வேண்டும். மத்திய, மாநில அரசுகள், நகராட்சிகள், ஊராட்சிகள், பஞ்சாயத்துக்கள் போன்ற அனைத்தும் இதில் கவனம் செலுத்த வேண்டும்.

வேலைவாய்ப்பு அனைவருக்கும் உறுதியானால், ஒவ்வொருவருக்கும் தன் வாழ்க்கையை நடத்தக் குறைந்தபட்ச ஊதியம் கிடைக்குமேயானால் ஏழைமை தன்னால் ஒழியும். அதே சமயம் உற்பத்தியும் நாட்டில் பெருகி, பொருளாதாரம் மேம்படும். ஆக அரசு வகுக்கும் எல்லாத் திட்டங்களும் கொள்கைகளும் வேலைவாய்ப்பைப் பெருக்குவதை மனத்தில் கொண்டே அமைய வேண்டும். சித்தாந்தங்களின் அடிப்படையில் அல்ல.

**வேலை செய்யும் சக்தியற்ற முதியோருக்கும் அங்கஹீனர்களுக்கும் (பென்ஷன்) நிதியுதவி அளிப்பது இரண்டாவது அம்சம்.**

இது நாகரிகமடைந்த எல்லா நாடுகளிலும் இன்றியமையாத விஷயமாகக் கருதப்படுகிறது என்பதைத் திரு சந்தானம் சுட்டிக் காட்டுகிறார்.

அடுத்தாற்போல், சமூக நலத் திட்டங்களுக்காக அரசாங்கம் எவ்வளவோ செலவழித்திருந்தும் அதன் முழுப்பயனும் மக்களுக்குக் கிட்டவில்லை என்பதை சந்தானம் எடுத்துக் கூறுகிறார். காரணம், எதற்கு முதலிடமும் முக்கியத்துவமும் தர வேண்டுமோ அதற்குத் தரவில்லை. சுதந்திரம் பெற்ற பத்தாண்டுகளுக்குள், பதினாறு வயது வரையிலான ஆண் பெண் அனைவருக்கும் கட்டாயக் கல்வி புகட்ட வேண்டுமென நமது அரசியல் சாஸனம் கூறுகிறது. ஆனால் சுதந்திரம் பெற்று இருபத்தெட்டு ஆண்டுகள் ஆகியும் இது ஓரளவே நிறைவேறியிருக்கிறது. **வேலைவாய்ப்பு, சமூகப் பாதுகாப்பு, கல்வி ஆகியவற்றை ஒவ்வொரு குடிமகனும் பெறுவது உறுதியாகி விட்டால், தாழ்த்தப்பட்ட அல்லது பலவீனமான சாரார் என்ற சொற்றொடருக்கே அர்த்தமில்லாமல் போய்விடும்.**

தேசத்தில் உள்ள குடும்பங்களில் பாதிக்கு மேல் குடிசைகளில் வாழ்கின்றன. இது ஆரோக்கியத்திற்குக் கேடு என்பது மட்டுமல்ல; நாட்டின் தன்மானத்துக்கே இழுக்கு. **குடிசை வாழ்வோருக்கு ஓட்டுக்கூரை அல்லது காங்கிரீட் கூரை வீடுகள் கட்டித் தருவது மிகவும் அவசியம்.** வீட்டு மனைப் பட்டா வழங்குவதை விட வீடுகள் கட்டித் தருவதே உகந்தது. குடியிருப்போர் மாதா மாதம் பணம்

வேலூர், கிறிஸ்துவ மிஷன் மருத்துவ மனையின் இருதய அறுவைச் சிகிச்சைப் பிரிவின் வெள்ளி விழாவை யொட்டிப் புதிதாக நிர்மாணிக்கப்படும்

**கமலா நேரு வார்டு கட்டிட உதவி நிதிக்காக**

*சங்கீத கலாநிதி*

**எம். எஸ். சுப்புலக்ஷ்மி — பாட்டு**

கண்டதேவி அழகிரிசாமி — வயலின்

டி. கே. மூர்த்தி — மிருதங்கம்

வி. நாகராஜன் — கஞ்சிரா

உமையாள்புரம் நாராயணஸ்வாமி — கடம்



7-3-1976 ஞாயிறு மாலை 6-30 முதல் 9 மணி வரை

**கோயமுத்தூர், ஆர்.எஸ். புரம், முனிசிபல் கலை அரங்கில்**


கட்டிச் சொந்தக்காரர்களாக அனுமதிக்கலாம். அல்லது வாடகை செலுத்தி நிரந்தரமாக வாசம் செய்ய வழி வகுக்கலாம்.

மதுவிலக்கை உடனடியாகத் தேசம் முழுவதும் அமல்படுத்தாமல் பன்னிரண்டு அம்சத் திட்டம் என்று ஒன்றை வகுத்திருப்பது விசனத்துக்குரிய விஷயம். குஜராத், தமிழ்நாடு தவிர மற்ற மாநிலங்கள் காந்தியடிகள் கருத்தையும் அரசியல் சட்டம் இதுபற்றிக் கூறுவதையும் புறக்கணித்து விட்டன.

மதுவிலக்கை அமுல்படுத்துவதில் சிரமம் ஒன்றுமில்லை. அமல்படுத்தாததற்கு உண்மைக் காரணம் மாநில அரசுகள் மதுக்கடைகள் தரும் வருவாயை இழக்க விரும்பாததே. **சூதாட்டம், லாட்டரி ஆகியவற்றை ஒழிப்பதும் மதுவிலக்கை அமல்படுத்துவதும் நாட்டு மக்களின் உடல் ஆரோக்கியத்தைக் காக்கும்' மன ஆரோக்கியத்தைப் பேணும்; தேசப் பொருளாதாரத்தையும் பலப்படுத்தும்.**

மற்ற எல்லாவற்றையும் விட அதி முக்கியமான விஷயத்தைக் கடைசியாகச் சொல்கிறார் திரு சந்தானம். அடுத்த சில ஆண்டுகளுக்குள் இந்தியாவில், 'இனி ஜனத் தொகை பெருகம் இராது' என்ற நிலை ஏற்பட்டாலொழிய நாம் என்னதான் பொருளாதாரத் திட்டங்களை வகுத்தாலும் அவை பயனற்றுப் போகும். **மூன்று குழந்தைகளுக்கு மேல் பெறக்கூடாது என்று சட்டமியற்றி அதற்கு அனுசரணையாக மருத்துவத் துறை முடுக்கி விடப்பட வேண்டும்.** தேசத் தலைவர்கள் இத்திட்டத்தைத் தைரியமாக அமல்படுத்தினால் மக்களிடம் எதிர்ப்பு கிளம்பாது.

இந்த ஆறு அம்சத் திட்டத்தை நிறைவேற்றி முடிக்கும் வரை மற்ற திட்டங்களையெல்லாம் அரசு தாமதப்படுத்தவோ குறைத்துக் கொள்ளவோ செய்யலாம் என்கிறார் சந்தானம். முழுமூச்சுடன் இத் திட்டங்கள் நிறைவேற ஒதுக்கும் நிதி போக எஞ்சியுள்ள தொகையை மிக ஜாக்கிரதையாக அத்யாவசியத் தேவைகளுக்கு — மின் உற்பத்தி ரசாயன உர உற்பத்தி போன்றவற்றுக்கு — பயன்படுத்த வேண்டும்.

திரு சந்தானத்தின் ஆறு அம்சத் திட்டம் ஆள்பவரின் ஆமோதிப்பைப் பெறுமானால் அவதிப்படும் மக்களுக்கு ஆறுதல் அல்ல, நல் வாழ்வே கிட்டும்.

அடுத்த இதழில்



ருஷ்ய அறிஞர் ஜெராசிமாவ்

பேட்டி: மலர் மன்னன்

நகர்வலம்: மேட்டூர் அணை

பி. எஸ். மணி

சிறுகதை: பூமியை வானம் தொடுவதில்லை

— பூரீமன்





# காங்கிரஸ் தலைவருடன் காரில் பேட்டி!

தஞ்சை மாவட்டத்தில் கபிஸ்தலம் மூப்பனார் குடும்பம் என்றால் தலைமுறை தலைமுறையாகக் காங்கிரஸின் சேவையில் ஈடுபட்டிருக்கும் குடும்பம் என்பது பிரசித்தம். செல்வமும் செல்வாக்கும் மிக்க குடும்பத்தில் மூன்று சகோதரிகளுடனும் நான்கு சகோதரர்களுடனும் உதித்த திரு ஜி. கருப்பையா மூப்பனார் இன்று தமிழ் நாட்டின் இணைந்த காங்கிரசின் தலைவராக நியமனம் பெற்றுள்ளார். இந்த நாற்பத்தைந்து வயது இளைஞரின் தலைமையில் தமிழ் நாடு காங்கிரஸ் மீண்டும் தனது பழைய உன்னத நிலைக்கு உயரும் என்பதற்கு, ஸ்வாகத் ஹோட்டலில் மலையாகக் குவிந்திருந்த மலர் மாலைகளே சான்று. அவருடைய தலைமையைக் காங்கிரஸ் பெரும் புள்ளிகளும், சாமானியர்களும் ஒருமனதாக வரவேற்கின்றனர் என்பதை இரண்டு மூன்று நாட்களாகத் தினமும் அவரைக் காண வரும் பெரும் கூட்டத்தின் மூலம் உணர முடிகிறது. இரவு ஒன்றரை அல்லது அதற்கும் பிறகும் கூட அவர் கண் விழித்திருக்க வேண்டிய அளவுக்கு அவரது ஆதரவாளர்கள் நேரில் வந்து வாழ்த்துகின்றனர்.

பாபநாசம் உயர்நிலைப் பள்ளியில் படித்த திரு கருப்பையா மூப்பனாருக்கு 1950ல் திருமணம் நிகழ்ந்தது. ஒரு பிள்ளையும் ஒரு பெண்ணும். பையன் கோவிந்தவாசன் ஆசான் நினைவுப் பள்ளியில் படிக்கிறான். பெண் உஷா ராணி வித்யோதயா மாணவி.

''எப்போது முதல் உங்களுக்கு அரசியலில் நேரிடையான ஈடுபாடு ஏற்பட்டது?''

''நீண்ட காலமாகவே எங்கள் வீட்டுக்கு அரசியல் பெருந் தலைவர்கள் வருவது வழக்கம். தந்தையாரும் காங்கிரஸ்காரர். அரசியல் பற்றி ஓரளவு ஏற்கனவேயே நான் அறிந்திருந்தாலும் 1952ல் நிகழ்ந்த முதல் பொதுத் தேர்தலின்போதுதான் நான் நேரிடையாக அரசியலில் ஈடுபட்டேன். அப்போதுதான் முதன் முறையாகத் தேர்தல் பிரசாரம் செய்தேன். 1956ல்தான் காங்கிரஸில் உறுப்பினர் ஆனேன். 1960 முதல் சிறிது காலம் பிராந்திய இளைஞர் காங்கிரஸ் கன்வீனராகப் பணியாற்றினேன். 1963ல் தஞ்சை மாவட்டக் காங்கிரஸ் கமிட்டியின் தலைவராக நியமனம் பெற்றேன். விவசாயக் குடும்பத்தில் பிறந்தவன் நான். முன்பெல்லாம் வேளாண்மையில் எனக்கு ஆர்வமும் ஈடுபாடும் இருந்தது. இப்போது, நேரிடை அரசியல் தொடர்பு ஏற்பட்ட பிறகு விவசாயமே மறந்து விட்டது!'' என்று கூறிச் சிரிக்கிறார்.

''பிரதமர் ஸ்ரீமதி இந்திராவை எப்போது முதல் முறையாகச் சந்தித்தீர்கள்?''

''அவர் பாரத அரசின் தகவல், ஒலிபரப்புத் துறை அமைச்சராக இருந்தபோது கும்பகோணத்துக்கு விஜயம் செய்தார். அப்போது மத்திய அமைச்சரவையில் இடம் பெற்றிருந்த திரு சி. ஆர். பட்டாபிராமன் தான் ஸ்ரீமதி இந்திராவைக் கும்பகோணத்துக்கு அழைத்து வந்தார். அதுதான் எங்கள் முதல் சந்திப்பு.''

''காமராஜருடன் நிகழ்ந்த முதல் சந்திப்பு...?''

''பூதான இயக்கத்தை யொட்டி முன்பு திரு ஜயப்பிரகாஷ் நாராயண் தஞ்சை மாவட்டத்துக்கு வந்திருந்த சமயம் காமராஜரும்




உடன் வந்திருந்தார். அப்போதுதான் அவரை முதலில் பார்த்துப் பேசினேன். அதன்பிறகு அவருடைய இறுதிக் காலம் வரை அவருடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தேன். சுருங்கச் சொன்னால், என் அப்பா இறந்த பிறகு, அந்த இடத்தில் அவரை வைத்துக் கொண்டாடி வந்திருக்கிறேன்'' என்று உணர்ச்சி மேலிடக் கூறுகிறார்.

''தமிழ் நாட்டின் நிர்வாகம் பற்றி ஏதாவது திட்டம் உங்கள் மனத்தளவில் உருவாகியுள்ளதா?''

''அரசியல்வாதிகள் நிர்வாகத்தில் குறுக்கிடாமல் இருக்க வேண்டும். ஜனநாயகத்தின் பெயரால் அப்படிக் குறுக்கிட்டதன் விளைவைத்தான் சமீபத்தில் பார்த்தோம். என்ன செய்ய வேண்டும் என்பதைவிட என்ன செய்யக்கூடாது என்பதை உணரத் தமிழ் நாட்டின் கடந்தகால அரசியல் எனக்கு ஒரு படிப்பினையாக இருந்திருக்கிறது. 'அரசியல் வேறு, ஆன்மீகம் வேறு என்று பிரிக்கவே கூடாது' என்று காந்திஜி அடிக்கடி கூறிவந்தார். ஆன்மீக உணர்ச்சியை அரசியல்வாதிகள் அடியோடு களைந்தெறிந்து விட்டால், நாம் தவறு செய்கிறோம் என்ற குற்ற உணர்வே இல்லாமல் போய் விடும். அதன் விளைவாகத் தொடர்ந்து தப்புச் செய்ய வழி வகுத்ததாக முடியும். காமராஜர் ராஜாஜியைச் சந்தித்து விட்டு வந்து ராஜாஜி கூறியதை என்னிடம் சொன்னார்: ''அரசியல்வாதிகளுக்கு ஆன்மீக உணர்வு அவசியம். இதை நான் சொல்வதை விட நீங்கள் எடுத்துச் சொல்வது பயனளிக்கும் என்று நினைக்கிறேன். உங்களைப் போன்ற *Popular Leader*தான் *moral aspects*ஐ மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். நீங்கள் இதைக் கவனத்தில் கொண்டு செயல்படவேண்டும் என்று விரும்புகிறேன்'' என்று ராஜாஜி கடைசிக் காலத்தில் காமராஜரிடம் கூறியதை அவர் மறக்கவில்லை. அதன் பிறகு பல கூட்டங்களில் காமராஜர் இதனை வலியுறுத்திப் பேசினார். அந்தக் கருத்து என்னை வெகுவாகக் கவர்ந்துள்ளது.''

தியாகப்பிரும்ம மகோத்சவக் கமிட்டியின் தலைவராகத் தொடர்ந்து செயல்பட்டு வரும் இவருக்குக் கர்நாடக இசையில் ஈடுபாடு மிகுதி. ''ஆராதனைக் கமிட்டியின் ஒரு பேரவைக் கூட்டத்துக்கு என்னை அழைத்திருந்தார், முசிறி சுப்பிரமணிய அய்யர். போனேன். திடீரென்று எதிர்பாராத விதமாய் என்னைத் தலைவராக்கி விட்டார்கள். இது நாலாவது 'டர்ம்' எனக்கு'' என்கிறார் திரு மூப்பனார்.

''உங்கள் வாழ்க்கையில் நிகழ்ந்த சுவையான நிகழ்ச்சி ஒன்றைக் கூறுங்களேன்'' என்றதும் அவர் ஒரு கணம் யோசித்துவிட்டுச் சொல்கிறார்: ''மாலை நான்கரை முதல் இரவு எட்டு மணி வரை நீங்கள் காத்திருந்தும் உங்களுடன் பேச ஒரு பத்து நிமிட அவகாசம் கிடைக்கவில்லை. பார்த்தசாரதி சுவாமி கோயிலுக்கும் அங்கிருந்து வடபழநி ஆண்டவர் கோயிலுக்கும் காரில் போன வண்ணம் உங்களுக்குப் பேட்டி கொடுத்தது எனக்குப் புதுமையான அனுபவம். உங்களுக்கும் அது புதுமையோ என்னவோ? இதுவே ஒரு சுவையான நிகழ்ச்சிதானே?'' என்று கேட்கிறார் இறை ஈடுபாடு மிக்க திரு கருப்பையா மூப்பனார்.

— பேட்டி: ரா. பா.

---

அவள்: **நமக்குக் கல்யாணம் என்று தெரிந்தால் என் வேலை போய்விடுமே?**

அவன்: **சரி, கல்யாண விஷயத்தை ரகசியமாக வைத்துக் கொள்வோம்!**

அவள்: **குழந்தை பிறந்தால் என்ன செய்வது?**

அவன்: **'குழந்தையிடம் மட்டும் நம் கல்யாண விஷயத்தைச் சொல்லி விடுவோம்!**

— சம்பத்குமாரி



# வேத மதத்தின் விசேஷ அம்சங்கள்

3

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

**பி**ரஸவ ஆஸ்பத்திரிக்குப் போய் வந்த வெள்ளைக்காரி, அங்கே பிறந்திருந்த குழந்தைகளைப் பற்றிய குறிப்புக்களைச் சொன்னாள். அதன்படி ஒரு குழந்தை கொழுகொழுவென்றிருந்தது : இன்னொன்று நோஞ்சானாக இருந்தது. ஒன்று அழகாக இருந்தது : இன்னொன்று அவலட்சணமாக இருந்தது. ஒன்று உசத்தியான 'வார்டி'ல் சௌகரியமாகப் பிறந்தது; இன்னொன்று சொல்லி முடியாத கஷ்டங்களுக்கு நடுவே ஒரு பரம ஏழைப் பெண்ணுக்குப் பிறந்தது.

''ஜன்மாவின் **கடைசியில்** பகவான் ஒருத்தரை நிரந்தர நரகத்துக்கு அனுப்புவது ஒரு பக்கம் இருக்கட்டும். அது நமக்குக் கண்ணுக்குத் தெரியாத விஷயம் ; இப்போது பல ஜன்மங்களின் **ஆரம்பத்தைப்** பிரசவ ஆஸ்பத்திரியில் பிரத்தியட்சமாகப் பார்த்தாயே ! இதில் ஏன் இத்தனை ஏற்றத் தாழ்வுகள் ? ஏன் ஒன்று தாரித்திரியத்திலும், இன்னொன்று சம்பத்திலும் பிறக்க வேண்டும் ? ஏன் ஒன்று ஆரோக்கியமாகவும் இன்னொன்று துர்ப்பலமாகவும், ஒன்று லட்சணமாகவும் இன்னொன்று அவலட்சணமாகவும் இருக்க வேண்டும் ? ஜீவனுக்கு ஒரே ஜன்மாதான் உண்டு என்ற உங்கள் மதக் கொள்கையை ஒப்புக் கொண்டால், அவை ஜனிக்கிற போதே இத்தனை பாரபட்சங்கள் இருப்பதைப் பார்க்கிற போது ஸ்வாமி கொஞ்சம்கூடக் கருணை அல்லது புத்திசாலித்தனம் இல்லாமல் மனம் போனபடி கன்னாபின்னா என்று காரியம் செய்து கொண்டிருக்கிறார் என்றுதானே ஆகிறது? அப்படிப்பட்ட ஸ்வாமி கருணை செய்வார் என்று எப்படி நம்பி பக்தி செலுத்துவது? பூர்வ ஜன்ம பாப, புண்ணியங்களை ஒட்டிப் புனர் ஜன்மா அமைகிறது என்ற கொள்கையைத் தவிர நீ பார்த்த ஏற்றத் தாழ்வுக்கு என்ன காரணம் சொல்லமுடியும் ?'' என்று கேட்டேன். அவள் ரொம்ப சந்தோஷத்தோடு நான் சொன்னதை ஏற்றுக் கொண்டு போனாள்.

ஆனால் நவீன காலத்தவர்களுக்கு இந்த விளக்கங்கள் (Explanations) போதாது. ''இதெல்லாம் அநுமானம்தானே (Inference)?'' என்பார்கள். ஸயன்ஸ்படி ப்ரூஃப் கேட்பார்கள். அப்படிப் பார்த்தாலும் இப்போது 'பாரா ஸைகாலஜி'க்காரர்கள் இந்த விஷயத்தில் நிறைய ஆராய்ச்சி பண்ணி, ஜன்மாந்தரங்கள் உண்டு என்பதற்கு ஆதாரமாக அநேக விஷயங்களைச் சொல்கிறார்கள். உலகம் முழுக்க இவர்கள் சுற்றி வந்ததில் எத்தனையோ இடங்களில் பூர்வ ஜன்மாவை நன்றாக ஞாபகம் வைத்துக் கொண்டு சொல்ல பல பேர்களைப் பார்த்திருக்கிறார்கள். பூர்வ ஜன்மத்தில் இப்போதைய இடத்துக்குத் துளிக்கூட சம்பந்தமேயில்லாமல் வேறு எங்கேயோ இருக்கப்பட்ட தூர தேசங்களில் தாங்கள் பார்த்தவற்றை, செய்தவற்றையெல்லாம் நினைவாகச் சொல்கிற பல பேர் இருக்கிறார்கள். இந்த ஜன்மாவில் கொஞ்சம்கூடச் சம்பந்தமில்லாத பலரிடம் அப்போது இவர்கள் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். அந்த விவரங்களை யெல்லாம் மறக்காமல் சொல்கிறார்கள். இவர்கள் சொல்வது உண்மைதானா என்று பரிசோதித்துப் பார்ப்பதற்காக பாராஸைகாலஜிக்காரர்கள் அந்தந்த ஊர்களுக்குப் போயிருக்கிறார்கள். போனால் அங்கே ஆச்சரியப்படுகிற மாதிரி இவர்கள் சொன்ன அடையாளங்களை, இவர்கள் பூர்வத்தில் சம்பந்தப்பட்டிருந்த மநுஷ்யர்களைப் பார்க்கிறார்கள். இது மாதிரி ஒன்று, இரண்டு அல்ல. ஏகப்பட்ட கேஸ்கள் இருக்கின்றன. நமக்கெல்லாம் முற்பிறவி சமாசாரங்கள் அடியோடு மறந்து போய்விட்டன. ஆனால் வெகு சிலருக்கு நினைவு இருக்கிறது. அநேகமாக இப்படிப்பட்டவர்கள் பூர்வ ஜன்மத்தில் இயற்கையாகச் செத்துப் போகாமல் (natural death)



# வட்ட மேஜை

**"கணவன் – மனைவி"** விமர்சனத்தில் "திரைக் கதை, வசனம், டைரக்ஷன் பொறுப்பை ஸ்ரீ ஏ. பீம் சிங் ஏற்றுள்ளதாகக் குறிப்பிட்டிருந்ததில் ஒரு திருத்தம். டைரக்ஷன் மட்டும்தான் பீம் சிங். திரைக் கதை வசனம்: கலைஞானம் – பனசை மணியன்.

கோயம்புத்தூர்–1
13–2–76 அன்புதாசன்

**மு**குந்தனின் சிரிப்புக் கதை, பாலாஜியின் சிரிப்பு மேடை, லலிதா செல்லப்பாவின் "பாடிக் கற" எல்லாம் வாய் விட்டுச் சிரிக்க வைத்தன. அவர்களுக்கு என் பாராட்டுக்கள். கல்கி ஒவ்வொரு இதழுமே சிரிப்பு மலர்தான். விமலா ரமணியின் கதை விழிப் புணர்ச்சியை உண்டாக்கியது. கல்லூரி மாணவனின் வாழ்க்கையைச் சரியாகச் சித்திரித்திருக்கிறார்.

ஸ்ரீரங்கம்
12–2–76 ஆர். ஸ்ரீனிவாசன்

**'சக்திக் கனல்'** கவிதை சிறப்பாக இருந்தது. பாராட்டுக்கள். ஜனரஞ்சகமான பிரபல இதழ்கள் 'புதுக் கவிதை' முயற்சிக்கு ஆதரவு தருவதில்லை என்பது பொதுவான குற்றச்சாட்டு. இதனை மறுக்கும் வண்ணம் 'கல்கி' புதுக் கவிதைகளைப் பிரசுரித்து உற்சாகப்படுத்தும் பாங்கு பாராட்ட வேண்டிய ஒன்று. 'கவிதை' என்பது ஒரே மாதிரியாய் இருக்கவும், தோன்றவும் கணக்கு அல்ல–அவரவர் ரசனை, ஞானம், மனம் சம்பந்தப் பட்டது. ஒரு விஷயம் பேத்தல், அல்லது நையாண்டி என்பது தவறு. பல நூறு கவிதைகளை வாசித்தவன் என்பது மட்டுமல்ல, 'அலைகள்' என்னும் புதுக் கவிதை (பலர் எழுதியது) நூலைத் தொகுத்து வெளியிட்டவன் என்கிற அடிப்படையில் சொல்கிறேன்: கல்கி தொடர்ந்து புதுக் கவிதைகளைப் பிரசுரிக்கட்டும்.

பழவந்தாங்கல்
13–2–76 எம். எஸ். தியாகராஜன்

**யா**ரிடம் சரடு விடுகிறீர்கள்? அலுவலக நாட்களில் ஏது ஐயா குதிரைப் பந்தயம்? விடுமுறை நாட்களில் மட்டும்தானே குதிரைப் பந்தயம் நடக்கும்? 15–2–76 கல்கியில் வெளிவந்த "ராமாமிர்தம் சினிமாவில் தோன்றுகிறார்...!" கதையைத்தான் சொல்கிறேன். ரொம்ப நன்றாகவே கதை விடுகிறீர்.

சென்னை–4
12–2–76 ஆர். வீரராகவன்.

15–2–76 இதழில் ஆர். கண்ணன் என்பவரின் கடிதத்தில் "நிறைய புதுக் கவிதைகள் எழுதுகிறவன் என்கிற முறையில்" என்ற வரிகள் இக்கடிதத்தை எழுதத் தூண்டுகிறது. மனத்தில் தோன்றும் உணர்ச்சிகளைப் புது மாதிரியான உருவம் கொடுத்து, படிப்பவர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் வண்ணம் எழுதப்படுவதுதான் புதுக் கவிதை. கல்கியில் எழுதப்பட்டு வரும் புதுக் கவிதைகள் புதுவிதமான கோணத்தில் எழுதப்படுபவை. அவை யாப்பிலக்கண விதிக்கு அடங்கா. வேய்ங் குழல் வேந்தன் என்ற புனைபெயரில் ஆர். கண்ணன் எழுதிய புதுக் கவிதைகளை(!) படிக்க வேண்டிய கட்டாயம் எனக்கு ஏற்பட்டது. அப்பொழுது எனக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளை நான் இங்கு எழுதினால் அவை ரசாபாசமாகப் போய்விடும்.

ரூமிலிருந்து உட்கார்ந்தபடி எல்லாருக்கும் சவால் விடுவது நாகரிகமல்ல. புதுமைப் பித்தன், கு. ப. ரா. நா. பிச்சமூர்த்தி ஆகியோர் உருவாக்கிய புதுக் கவிதையை இவர் வளர்த்துக் கொண்டிருக்கிற மாதிரி இவர் ஆணவத்துடன் எழுதியிருப்பது சங்கடமாக இருக்கிறது. புதுக் கவிதையை நகைச் சுவைக்குப் பயன்படுத்துவது பாபமான காரியம் என்று இவர் நினைக்கிறார் போலும். நகைச்சுவை உணர்வில்லாதவர்கள்தான் அப்படி எண்ணுவார்கள்.

சென்னை – 5
17–2–76 எஸ். ராகுலன்

---

அதாவது நோய், நொடி வந்து செத்துப் போகாமல், கொலை செய்யப்பட்டவர்களாகவோ அல்லது திடீரென்று ஒரு விபத்திலே சிக்கிக் கொண்டு அப்போதே மரணம் அடைந்தவர்களாகவோ இருக்கிறார்கள் என்று ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்கள்.

**ம**னிதன் விஷயத்தில் புனர் ஜன்மாவை (reincarnation)ச் சொல்வது போல் ஸ்வாமியின் விஷயத்தில் அவதாரங்களை (Incarnations)ச் சொல்வதும் ஹிந்து மதம் ஒன்றுக்கே உரிய இன்னொரு தனியம்சமாகும். சத்வஸ்து – மெய்ப்பொருள் – ஒன்றுதான்; அதுதான் இத்தனை ஜடப் பிரபஞ்சமாகவும் ஜீவராசிகளாகவும் ஆகியிருக்கிறது என்பதே நம் மதத்தின் பரம தாத்பரியம். அப்படியானால் அந்த ஒரு பரம்பொருளே மாறி மாறி ஜனன மரணங்களுக்கு ஆளாகிற அத்தனை பேரும் ஆகும். அது தவிர, இந்த ஜீவ–ஜடலோகத்தை எல்லாம் ரட்சிக்கிற ஈசுவரனாகவும் அது இருக்கிறது அல்லவா? இந்த ஈசுவரனுக்கு மநுஷ்யர்கள் போல் கர்ம பந்தம் இல்லை. மனிதன் கர்மத்தை அநுபவிக்கத்தான் பல ஜன்மா எடுக்கிறான். கர்ம பந்தமேயில்லாத ஈசுவரன் இப்படி ஜன்மா எடுக்க வேண்டியதில்லைதான். ஆனால் புதுப் புதுப் பிறவிகளில் இந்த ஜீவன் பழைய கர்மத்தைக் கழுவிக் கொள்ளாமல் மேலே மேலே சேற்றை வாரிப் பூசிக் கொள்கிறானே என்பதைப் பார்த்து அவனுக்கு வழிகாட்டிக் கைதூக்கி விடுவதற்காகப் பரம கருணையுடன் ஈசுவரனும் பூலோகத்தில் பல முறை அவதரிக்கிறான். அதர்மம் ஓங்கி, தர்மம் நலிகிற போக்கு உச்சமாகிற போது, அதர்மத்தை ஓட்டி, தர்மத்தை நிலைநாட்டுவதற்காகவும் ஸாதுக்களை ரட்சித்து, துஷ்டர்களை சிட்சிப்பதற்காகவும் பகவான் பல அவதாரங்களைச் செய்கிறான் – கிருஷ்ண பரமாத்மா கீதையில் இப்படிச் சொல்லியிருக்கிறார்.

(தொடரும்)

---

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]

# ஸாண்டல்வுட் நைஸில்*

## உங்கள் மேனியைப் பாதுகாக்க இதனினும் சிறந்த டால்க் இல்லை—அதுவும் இத்தனை சிறந்த நறுமணத்துடன்.

ஸாண்டல்வுட் நைஸில்—இதிலிருந்து நீங்கள் பெறும் நன்மைகளை வேறு எந்த சாதாரண டால்கம் பவுடரும் தருவதில்லை. உங்கள் மேனிக்கு ஆண்டு முழுவதும் அருமையான பாதுகாப்புத் தரவல்ல விசேஷப் பொருட்கள் அடங்கியது நைஸில் ஒன்றுதான். துர்நாற்றம் வீசச்செய்யும் கிருமிகளைக் கொல்ல வல்ல குளோர் பென்ஸீன். வியர்வையை முற்றிலும் உறிஞ்ச வென்றே விசேஷ முறையில் உருவாக்கப் பட்ட இந்த பவுடர்—உங்கள் மேனி மீது அதிக நேரம் நீடித்து நிற்கிறது. சிந்தை குளிர்விக்கும் சந்தன மணம்...புத்துணர்வை உங்கள் மீது வாரியிறைக்கிறது.

மயக்கும் சந்தன மணம். நாளெல்லாம் நீடித்த புத்துணர்வு. ஆண்டில் 365 நாட்களும் புதுமை உணர்வு.






Siata's-GN-109 B76 Tam.

**ஸாண்டல்வுட் நைஸில்*—உங்கள் மேனிக்கு உகந்தது**

ஸாண்டல்வுட் **நைஸில்*** நன்மருந்து குணங்களடங்கிய பவுடர் **க்ளாக்ஸோ** தயாரிப்பு

*டிரேடு மார்க்

## செவிநுகர் கனிகள்

"**யா**ம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்" என்னும் ஆன்றோர் வாக்குக்கு ஏற்ப, இந் நூலாசிரியர் தாம் படித்து, ரசித்து நுகர்ந்து அநுபவித்த தமிழ்க் கவிதைகளைப் பிறரும் ரசித்து அநுபவிக்கும் வண்ணம் இந் நூலின் மூலம் அரும் பணி யாற்றியிருக்கிறார். பெரும்பாலும், வேதாந்தக் கருத்துக்கள் அடங்கிய பாட்டுக்களையே விளக்கத்துக்கு எடுத்துக் கொண்டிருக்கிறார்.

ஆசிரியருடைய நோக்கம், முஸ்லிம் புலவர்கள் அனேக தமிழ் நூல்கள் இயற்றி யிருக்கிறார்கள் என்ற உண்மையை விளக்கு வதுதான். மொழியை, மதத்தின் வழியாகப் பிரிப்பது சரியல்ல. தமிழ்நாட்டிலுள்ள முஸ் லிம்கள் தமிழைத் தாய் மொழியாகக் கொண் டவர்கள். அவர்களும் தமிழர்களே என்பதை இந் நூலாசிரியர் பல இடங்களில் கூறியிருக் கிறார். "குணங்குடியாரின் கவிதைச் சிறப்பு" என்ற கட்டுரையில் மிகவும் சிறப் பாக இக் கருத்தை வலியுறுத்தியிருக்கிறார்.

குணங்குடி மஸ்தான் சாஹிபு என்ற பெயர் தமிழ்நாட்டுக்குப் புதிய பெயர் அல்ல; அவ ரது வேதாந்தப் பாடல்களும் புதியவையல்ல. இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கையான ஏகத்துவம் என்ற அத்வைதக் கொள்கையை வலியுறுத்துபவை அவரது பாடல்கள்.

திருவாசகத்தைப் பற்றிய கட்டுரை, மிகச் சிறந்த ஒன்று. பற்றற்ற பரம ஞானியாகிய மணிவாசகப் பெருந்தகை இறைவனின் ஏகத் துவத்தையும், இறைத் தன்மையின் ஒருமை யையும் பற்றித் திருவாசகத்தில் பரவலாகக் கூறியிருக்கிறார். அத்துடன் பக்தி மீதுற அகங்கனிந்து உருகி, 'பால் நினைந்தூட் டும் தாயினும் சாலப் பரிந்து', தம்மை ஆட் கொண்ட திருப்பெருந்துறை யுறை சிவனைப் பாடியிருக்கிறார். அடிகளின் பக்திச் சுவையை, பற்றற்ற தன்மையை, பாசம் நீங்கிய பரம ஞானத்தை, ஆசிரியர் தம் திறனாய்வுக் கண் ணோடு பார்த்து, நுகர்ந்து, அநுபவித்துத் தம் அநுபவத்தை வெளியிட்டிருக்கிறார்.

"தமிழ் முஸ்லிம்கள்" என்ற கட்டுரை அனைவரும் படித்து உணர வேண்டிய கட் டுரை. முஸ்லிம்கள் தமிழ் மொழிக்கு ஆற்றி யிருக்கும் அருந் தொண்டைப் பற்றி விவர மாகக் கூறியிருக்கிறார். சீறாப் புராணத்தை இயற்றிய உமறுப் புலவரைப் பற்றிய விவ ரங்கள் யாவரும் அறிந்து கொள்ள வேண்டி யவை. ஆண்டவனின் திருத் தூதரான நபிகள் நாயகத்தின் வரலாறு பற்றிய சீறாப் புராணப் பாடல்கள் சிறப்பு மிக்கவை; சொல் வழகும் கருத்தழகும் மிக்கவை.

"குறள் கண்ட அறம்" என்னும் கட்டுரை திருக்குறளின் சாரமாக விளங்குகிறது. புறங் கூறாமை, பயனில சொல்லாமை, இனியவைச் சம் ஆகிய மூன்று நற்குணங்களை வள்ளுவர் நோக்கில் சீர்தூக்கி விளக்கி யிருக்கிறார், ஆசி ரியர். அவ்விளக்கம் திருக்குறள் ஆராய்ச்சி யாளருக்கும் பெரிதும் பயன்படும்.

இந்நூலில், சிந்தனைக்கு விருந்தாக விளங் கும் பதினைந்து கட்டுரைகள் உள்ளன.

பன்மொழிப் புலவர், பல்கலைச் செல்வர், டாக்டர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்களின் வாழ்த்துரை இந்நூலுக்குத் தனிச் சிறப்பை அளிக்கிறது. —**ஸோமாஸ்**

ஆசிரியர்: மு. மு. இஸ்மாயில்; பிரசுரம்: வானதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை—17. விலை: ரூ. 6.00.

## பாலஸ்தீனப் பயணம்

**இ**யேசுநாதர் வாழ்ந்து காட்டி, அடிச் சுவடுகள் ஒற்றிய புனித மண்ணின் ஒவ்வொரு பகுதியையும் பக்தியோடு படம் பிடித்துக் காட்டுகிறார் சுவாமி ஆ. ஜே. அடைக்கலம் அவர்கள். அதோடு ஒவ்வோர் இடத்தையும் காணும்பொழுது தமக்கு ஏற்பட்ட உணர்வு களை வரலாற்றுப் பகைப் புலனில் வடித்துக் கொடுக்கும் ஆசிரியரது எழுத்தில் படிப்பவர் உள்ளமுமே பரவசப்பட்டுப் போகும்.

கருங்கடலுக்குச் சாக்கடல் என்று மட்டும் தானா பெயர்? உப்புக் கடல், கந்தகக் கடல் என்றெல்லாம் கூடப் பெயர்கள் வழங்கு கிறது. இந்தக் கடலில் மீன், புழு, பூச்சி போன்றவை உயிர் வாழ்வ தில்லையாம். இதில் குளித்தல் உடலுக்கு நலமாம். 'கடல் என்றால் உப்பாகத்தானே இருக்கும்?' என்று எண்ணுபவர்களுக்கு லோத் என்பவரின் மனைவி உப்புச் சிலையான கதையைக் கூறி, இந்தக் கடலின் நீர் வாயில் வைக்கவே வழங்காது என் பதைக் காட்டுகிறார். அவள் வாழ்வைச் சுட்டிக் காட்டி,

# படித்தோம்





1. இஸ்மாயில்.
2. சுவாமி அடைக்கலம்.

3. கல்பனா.

4. ராஜஸ்தான் ஓவியம்.





# சொல்கிறோம்

'கணவனுக்குப் பணிந்து நடப்பதுதான் பெண்களின் சிறப்பு. அடக்கமே ஆரணங்குகளின் அணிகலன். அதை உதாசீனப்படுத்தும் அடங்காப்பிடாரிகளின் கதி என்ன ?' வென்பதைக் கூறுகிறார்.

ஒருவகை மீனுக்குப் புனித ராயப்பரின் பெயரை வைத்திருக்கிறார்களாம். புனித ராயப்பர் மீன் பிடித்துக் கொண்டிருந்த போது, ஒரு வகை மீனின் வாயிலிருந்து நான்கு டிராக்மா நாணயம் கிடைத்ததே காரணம். கதையின் சுவாரஸ்யம் கெடாமல் ஆர்வத்துடன் படிக்கத் தூண்டும் உத்தியைக் கையாள்வதே போல் தமது கட்டுரைத் தொடரையும் ஆசிரியர் நடத்திச் செல்கிறார். அவர் உணவு அருந்தச் சென்ற ஓட்டலில் உணவுப் பொருள்களில் முழுதாக வறுத்த பெரிய மீன் ஒன்று இருந்ததாம். அந்த ஓட்டலுக்கு வரும் பயணிகளின் அதிர்ஷ்டத்தைப் பரிசோதிக்கத் தினமும் ஒரு மீனின் உள் நாணயத்தை வைப்பார்களாம். அன்று தமக்கு அடித்தது யோகம் என்பதைச் சொல்லும்பொழுது 'ஸஸ்பென்'ஸுக்கு ஒரு நல்ல 'சான்ஸ்' தருகிறார்.

'மனிதனைத் தெய்வ நிலைக்கு உயர்த்த தெய்வமே மனித உருக் கொண்ட அந்தத் தெய்வ சந்நிதானத்தில் நிற்கும்பொழுது நம்மையும் அறியாத பிரமிப்பும், வியப்பும் பரவசமும் ஏற்படுகிறது. ஏதோ ஒரு காந்த சக்தி நம்மைப் பிடித்து இழுத்து நிறுத்துவது தெரிகிறது' என்னும் இடத்தில் அருவமும் உருக்கொள்ளும் என்பது நிருபணமாகிறது.

நூலை எழுதுகையில் இந்தியர்களாகிய நமக்கு இந்தியச் சூழலையும் கோடி காட்டிக் கொண்டு செல்லும்பொழுது, எம்மதமும் சம்மதம் என்று கூறாமல் கூறுவதாகத் தோன்றுகிறது. டாக்டர் இரா. அருணப்பா தமது அணிந்துரையில் ''இந்நூலை வாசிப்பவர்கள் தாங்களும் புனித நாட்டில் பயணம் செய்வது போல் உணர்வர் எனின் மிகையாகாது. கிறிஸ்துவர்கள் மட்டுமன்று; பிறரும் இதனைப் படித்துப் பயனடைய வேண்டுமென இறைவனை இறைஞ்சுகிறேன்'' என்கிறார். மத மாற்சரியங்கள் மறக்க அந்தச் சிபாரிசை நாமும் ஆமோதிப்போம். **-ராஜீ.**

பிரசுரம்: வானதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை—600017. விலை ரூ. 10.

## பருவ மழையில்

**ப**ருவ மழையில் நீங்கள் நனைவதற்கு இச்சிப்புடி கிராமத்துக்குச் செல்ல வேண்டும்! உங்களுக்குப் பலவித உணர்ச்சிகளை அள்ளித்தர விதம்விதமான கதாபாத்திரங்களும் விசித்திரப் பிரகிருதிகளும் அங்கே இருக்கிறார்கள் !

பால்யம் கனாக் காண்கிற வயசு. கண்ணும் மனசும் அலைகிற வயசு. அந்தப் பருவத்திலே லோகம் முழுதும் மோக மழையே பெய்யுமாம் ! பன்றிகூட அந்தப் பருவத்தில் மெருகேறிக் காட்சி தருமாம் ! இச்சிப்புடி கிராம விஷயத்திலும் இது நூற்றுக்கு நூறு உண்மை!

பருவ மழையின் மோக வெறியில் தறிகெட்டுச் செல்லும் 'அரகஜா' ராஜப்பா மகாலக்ஷ்மி மாதிரி பெண்ணைத் திரஸ்கரிப்பதில் அதிசயமில்லை ! கழைக் கூத்தாடிப் பெண்ணும் பருவ மழையில் மகாராணியாக அவனுக்குக் காட்சி தருவதிலும் வியப்பில்லை ! ஆனால் ராஜப்பாவின் தந்தையும், பெண்ணின் தந்தையும், மகாலக்ஷ்மியும் படும் அவஸ்தைகள் நம்மை நெகிழ வைக்கின்றன.

பருவ மழையில் மற்றொரு சோகக் காட்சி, மொட்டைக் கடுதாசியை நம்பி விஜயராகவன் தன் புது மணம்புரிந்த மனைவி ரங்காவை அக்னிக்கு இரையாக்கும் பரிதாபம்தான் !

''நான் அக்கினிஹோத்திரி குடும்பத்துப் பெண். நான் எங்காத்து அக்கினியிலிருந்து வந்தவள்!'' என்று அந்த ரங்கா அலறும் போது விஜயராகவனையும் 'அக்கினி'யில் குளிப்பாட்ட வேண்டும் என்று தோன்றும்.

பருவ மழையில் வரும் ஒவ்வொரு பாத்திரத்தையும் நிஜ வாழ்க்கையில் எங்கேயோ சந்தித்திருப்பதாகத் தோன்றுவதே நாவலின் வெற்றி.

கதாசிரியர் கல்பனாவின் எளிய இனிய நடை உணர்ச்சிகளை அப்படியே பிட்டுப் பிட்டு வைத்து விடுகிறது. **—பி. எஸ். எம்.**

பிரசுரம்: குமரிப் பதிப்பகம், நாகப்பட்டினம். விலை ரூ. 5.

## இந்திய ஓவியம்

**பா**ரதக் குடிமகன் பெருமைப்படக்கூடிய விஷயங்கள் எவ்வளவோ உண்டு. அவற்றில் நமது தொன்மையான ஓவியக்கலையும் ஒன்று.

சரித்திர காலத்துக்கும் முற்பட்ட நாளிலிருந்து இந்திய ஓவியம் எப்படி எப்படி வளர்ச்சி பெற்றிருக்கிறது, எந்த எந்த

விஷயங்களால் உத்வேகம் பெற்றிருக்கிறது. எந்த எந்த மன்னர்கள் ஊக்கமும் உற்சாகமும் அளித்தார்கள், என்பன போன்ற செய்திகளை இப்புத்தகம் நன்கு விளக்குகிறது.

சிற்பம், சித்திரம் ஆகிய கலைகள் பற்றி உலகம் சிந்திக்கத் தொடங்காத நாட்களிலே அவற்றிற்கெல்லாம் ஒரு வரன் முறையும் இலக்கணமும் வகுத்து வைத்து விட்டுச் சென்றிருக்கின்றனர் நம் முன் னோர்கள். அந்த சாஸ்திரங்களை யெல்லாம், இந்நூலாசிரியர் கோடி காட்டிச் செல் கிறார்.

எல்லாவற்றுக்கும் மேலாகப் புத்தகம் முழுவதும் வரி வடிவச் சித்திரங்கள் விரவி வருகின்றன. அஜந்தா, பனமலை, வாதாபி, தஞ்சை ஆகிய இடங்களில் உள்ள வண்ண ஓவி யங்களும் இடம் பெற்றுள்ளன. முகலாயர் காலத்து ஓவியங்கள், ராஜஸ்தானி ஓவியங்கள் ஆகியவையும் கண்ணைக் கவருகின்றன.

— எஸ். வி. எஸ்.

ஆசிரியர்: க. சிவராம மூர்த்தி. மொழி பெயர்ப்பு: மே. சு. இராமசுவாமி, பிரசுரம்: நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா, கிரீன் பார்க்; புதுதில்லி. விலை: 7.50

## விநாயகர் அகவல் (விளக்கவுரையுடன்)

**ஸ்ரீ** காஞ்சிப் பெரியவர்கள் ஊக்கி எழுது வித்துள்ள ஓர் உத்தமமான நூலின் குறை களைச் சொல்லி விமரிசனத்தை முடிக்காமல் தொடக்கத்திலேயே சொல்லி விடலாம். பொழிப்புரையும் விரிவான விளக்கமும் கொண்ட இந்நூலில் பதவுரை இல்லாதது ஒரு பெருங் குறை. உதாரணமாக, பதவுரை இல்லாததால் ''நாவிரு புயமும்'' என்பதில் வரும் ''இரு'' என்பதற்குப் ''பெரிய'' என்று பொருள் என்றோ; ''காலால் எழுப்பி'' என்ப தில் ''கால்'' என்பது ''மூச்சுக் காற்று'' என்றோ சாமானியர் புரிந்துகொள்ள முடி யுமா? ''அருள் தரும் ஆனந்தத் தழுத்தி என் செவியில்'' என்பதற்குப் பொழிப்புரை, விளக்கவுரை இரண்டிலுமே ''என் செவி யில்'' விட்டுப் போயிருக்கிறது. மிகப் பழக்க மான சில மேற்கோள்கள் தவறான பெயர் களில் தரப்பட்டுள்ளன: ''பெற்றலும் பிறந் தேன் இனிப் பிறவாத தன்மை வந்தெய்தி னேன்'' என்ற சுந்தரர் வாசகம் அப்பர் வாக்கெனவும் (பக். 46), மாணிக்கவாசக ரின் கோத்தும்பி சுந்தரருடையதாகவும் (பக். 56) கூறப்பட்டுள்ளன.

இப்படி இன்னும் சில குறைகளைச் சுட்டிக் காட்டலாம். குறைகள் குறைவுதான். தெளிந்த நடையில் உயர்ந்த தத்துவங்களை இலக்கியம், யோக சாஸ்திரம், வேதாந்தம், பக்தி நூல்கள் ஆகியவற்றின் துணையோடு அற்புதமாக விளக்கி யுள்ளார் ஆசிரியை. அவ்வை பாடிய ஆனைமுகன் பெருமை மற் றொரு பெண்மணியால் நம் ஆசான் அருளில் விளக்கம் பெற்று விட்டது. உரையாசிரியை யின் வடமொழி, தென்மொழி, ஆங்கில ஞானத்துக்கு மட்டுமின்றி, மக்களின் மனத் தத்துவம்புரிந்து எழுதும் நுண்ணாற்றலுக்கும், இவை யாவற்றுக்கும் மேலாக அவரது ஆழ்ந்த பக்தி உணர்வுக்கும் இந்நூல் சான்றாகும். விலை அதிகமெனப் பார்க்க வேண்டா. ஆசார் யாள் ஆணைப்படி பம்பாயில் அமைக்கப்பட்ட ''ஸுதக்ஷிணா'' என்ற சமய நிறுவனத்தார் குறைவான பிரதிகளை வெளியிட்டதால் விலை உயர்வாக வைக்க நேர்ந்ததாம். உள்ள மேம்பாடு நல்கும் உயர்ந்த நூலைப் பெறு கையிலேயே இந்த நல்ல நிறுவனத்துக்கு க-தட்சிணையாகவும் நூலை வாங்கலாம்!

— ஹஸ்தினி

[உரையாசிரியர் ஆர். ராஜலக்ஷ்மி, கிடைக் கும் இடம்: Sudakshina Trust, 126A, Dhurwali (off) Dr. Nariman Road, Bombay - 400025, Price Rs. 15.]

## வரி ஆலோசனை

**வரி** செலுத்தாமல் இருந்தால் குற்றம். ஆனால் சட்டபூர்வமாக வரிகளைக் குறைத்துக் கொள்ள முயல்வது குற்றமில்லை. இதனை உச்ச நீதிமன்றமே ஒரு தீர்ப்பில் வலியுறுத்தியுள் ளது: ''தன்னுடைய வரிப்பளுவைக் குறைந்த பட்சமாக்கும் முறையில் ஏற்பாடுகளை, வரி விதிக்கப்படுபவர் செய்து கொள்ளலாம் என் பது ஒத்துக்கொள்ளப்பட்ட சட்ட அம்ச மாகும். தன்னுடைய வரிப் பளுவைக் குறைக்கச் சட்டப்படி ஏற்பாடு செய்யும் முறை சட்டத்தின் கீழ் அனுமதிக்கப்படக் கூடியதே.''

இன்றைக்கு உள்ள கடுமையான வரி விதிப் புக்களை நோக்குமிடத்து வியாபாரியாகட்டும் தொழிலதிபராகட்டும் வரிச் சட்ட நுணுக் கங்களைப் புரிந்து கொண்டு சாமர்த்திய மாகச் செயல்பட வில்லையானால் முன்னேறவே முடியாது. சட்ட நுணுக்கங்களைப் புரிந்து கொள்பவர்கள் வரிப் பொறுப்புக்களைத் தவிர்க்கவோ கணிசமாகக் குறைத்துக் கொள்ளவோ முடியும்.

வரி ஆலோசனை என்ற பத்திரிகை பல் வேறு வரிச் சட்டங்களையும் அலசி ஆராய்ந்து புரிய வைக்கிறது. உயர்நீதி மன்ற, உச்ச நீதி மன்றத் தீர்ப்புக்களை விளக்குகிறது. தமிழில் நடைபெறும் இம்முயற்சி ஒரு முன்னோடி என்பதுடன் ஆங்கிலக் கல்வி அறி வில்லாத எத்தனையோ பல சிறிய, பெரிய வியாபாரிகளுக்குப் பெரிதும் உதவும்; பல பிரச்னைகளுக்குத் தீர்வு காணப் பயன்படும்.

சமீபத்திய இதழின் மேலட்டையில் எழுப் பப்பட்டுள்ள கேள்விகளே இதற்குச் சான்று. ''கூட்டாளியின் வரி பாக்கிக்குக் கம்பெனி பொறுப்பா?'', ''பிதுரார்ச்சித சொத்தைத் தானம் கொடுத்தால் நன்கொடை வரியா?'' என்பன அவற்றுள் இரண்டு. இது போன்ற பல்வேறு கேள்விகளுக்கு இவ்விதழ் பதிலளிக் கிறது.

— ஜெயந்தி

ஆசிரியர்: வேதாந்த தேசிகன்; விலாசம்: 3-ஏ, வாரன் ரோடு, சென்னை 600004.

---



'எப்போதும் வீழ்ந்ததில்லை' என்பதில் ஒன்றும் பெருமை யில்லை. விழும்போதெல்லாம், எழுந்து நிமிர்ந்து நிற்கி றோமே, அதுதான் பெருமை. — ஆலிவர் கோல்ட்ஸ்மித்

— முத்து

# சேரமான் காதலி

கண்ணதாசன்

## அத்தியாயம் 18

## யார் அந்த அதிதிகள்?

அவள் சுற்றுமுற்றும் பார்த்தாள். பின், கைகளைத் தட்டினாள். ஏதோ அரண்மனை அந்தப்புரத்தில் நீண்டநாள் வாழ்ந்தவள் போல, அவ்வளவு உரிமையோடு சேவகர்களை அழைத்தாள்.

ஆடிக் கொண்டே இரண்டு சேவகர்கள் அங்கு வந்து நின்றார்கள்.

மகாராஜா இரவு பகலாக ஆடுகிறார் என்றால், சேவகர்கள் கொஞ்ச நேரமாவது ஆடக் கூடாதா?

அங்கே இருந்த பெண்களை அப்புறப் படுத்தும்படி அவள் ஜாடை காட்டினாள். சேவகர்கள் ஒவ்வொரு பெண்ணையும், கைத் தாங்கலாக அழைத்துச் சென்றார்கள்.

மாதவி கதவைத் தாழிட்டாள்; அது அவளுக்குப் புதியதல்ல!

அவளை நாடி வரும் ஒவ்வொரு ஆடவனும் அந்த இரவே அவளுக்கு முதலிரவு என்று எண்ணும்படி நடந்து கொள்பவள்; நாணம் கொண்டவள் போல் பிறரிடம் நடிக்கும் நடிப்பை அவள் கவுடதேவனிடம் நடிக்கவில்லை. காரணம், கவுடதேவன் எதையும் புரிந்து கொள்ளக்கூடிய நிலையில் இல்லை.



''என் பச்சைக்கிளி நீதான்!'' என்ருன்.

''இத்தனை நாட்களாக எங்கே போயிருந்தாய்?'' என்ருன்.

அவள் கைகளைப் பிடித்துக் கொண்டு, ''நான் கொடுத்த கணையாழி எங்கே?'' என்ருன்.

''உன்னைப் பட்டத்து ராணி ஆக்கவில்லை என்று தானே என் மேல் கோபம்?'' என்ருன். அவளும் ''ஆமாம்!'' என்ருள். ''இனி நீ தான் என் பட்டத்து ராணி!'' என்ருன். அவள் சிரித்தாள்.

''நான் எவ்வளவு குடித்தாலும் நிதானமாக இருப்பேன்!'' என்ருன்.

''எல்லோருமே அப்படித்தான்'' என்ருள் மாதவி.

தான் வந்த காரியத்தைச் சொல்லும் நேரம் இதுவல்ல என்று கண்டு கொண்டாள்.

''இனிமேல் நீங்கள் அதிகம் குடிக்கக் கூடாது!'' என்ருள்.

''நிச்சயமாகக் குடிக்க மாட்டேன்; உன் கையால் கொஞ்சம் கொடு''என்ருன்.

அவன் உளறிக் கொண்டே பேசினுன். அவள் தெளிவாகவே பேசினுள்.

கொஞ்ச நேரமாவது அவன் நிதானத்தோடிருந்தால், வந்த விஷயத்தைச் சொல்லி விடலாம் என்று கருதி, குளிர்ந்த நீரை எடுத்து அவன் முகத்தில் தெளித்தாள்.

''மதுவைத் தெளிக்கக் கூடாது; குடிக்க வேண்டும்!'' என்ருன் அவன்.

''இது மதுவல்ல; தண்ணீர்!'' என்ருள் அவள்.

''இதை நான் பார்த்ததே இல்லை!'' என்ருன் அவன்.

அவன் உதடுகளை அவள் தடவிக் கொடுத்தாள். அவன் உதடு உலர்ந்து போயிருந்தது. கொஞ்சம் குளிர்ந்த தண்ணீரை வாயில் ஊற்றினுன்.

''கொஞ்சம்.... மது!...'' என்று கொஞ்சினுன் அவன்.

குடித்து விட்டால் சில பேர் அரக்கர்களாகி விடுகிருர்கள். சில பேர் குழந்தைகளாகி விடுகிருர்கள். கவுடதேவன் குழந்தையாகும் ஜாதி. அவனை எப்படியும் பயன்படுத்தலாம் என்பது அவளுக்குப் புரிந்தது.

காமதேவனின் நாடகத்தில் பயிற்சி பெற்ற இருவர் — ஒருவன் அலுத்துப் போனவன், ஒருத்தி செயற்கையாகி விட்டவள்.





அவன் மெதுவாக எழுந்தான். ஓர் இரும்புப் பெட்டகத்தில் இருந்து வைர நகை ஒன்றை எடுத்தான். தள்ளாடிக் கொண்டே வந்து அவள் கழுத்தில் அணிவித்தான். "ஏய், யாரங்கே?..." என்று கூச்சல் போட்டான்.

இரண்டு சேவகர்கள் ஓடோடி வந்தனர்.

"வாத்தியக்காரர்களை அழைத்து வா" என்றான்.

சேவகர்கள் வெளியே ஓடினர்.

கவுட தேவன் கட்டிலில் சாய்ந்தான்.

கட்டிலுக்குப் பின்புறம் இருந்த ஜன்னல் மெதுவாகத் திறந்தது. அங்கிருந்து மங்கலமே உருவான ஒரு திருமுகம் எட்டிப் பார்த்தது. கண்ணிலிட்ட மை கண்ணீரில் கரைந்து அந்தத் திருமுகத்தில் கோலமிட்டிருந்தது.

கவுடதேவனுக்கு எதிரே உட்கார்ந்திருந்த மாதவியால் அதைப் பார்க்க முடிந்தது. அவள் மெதுவாக எழுந்தாள்.

"என்ன...?" என்று குழறினான் அவன்.

"கொஞ்சம் மதுவூற்றி வருகிறேன்!" என்று ஜன்னலருகே சென்றாள்.

அந்த மங்கலத் திருமுகம் அவளை யாரென்று விசாரிக்கவில்லை.

"நான் அவரது பட்டத்து ராணி. நேற்றிலிருந்து அவர் ஒன்றுமே சாப்பிடவில்லை" என்று, துயரத்தோடு கூறி விட்டுக் கதவைச் சாத்திக் கொண்டு போய் விட்டது.

மாதவியின் கண்களிலும் கண்ணீர் துளிர்த்தது.

'நமக்கோ குலமகளாக இருக்கும் வாய்ப்பில்லை. குலமகளுக்கோ குதூகலமாக இருக்கும் வாய்ப்பில்லை' என்று எண்ணியபோது ஒரு பெருமூச்சிலே அவள் மார்பு ஏறி இறங்கியது.

வாத்தியக்காரர்கள் உள்ளே நுழைந்தனர். அவர்கள் வாசிக்கத் தொடங்கினர். அவர்களும் சாப்பிடவில்லைபோல் இருக்கிறது. தொடக்கமே 'சோக கீதமாக ஒலித்தது. மாதவியின் மனோ நிலைக்கும் அது ஒத்ததாகவே இருந்தது.

பட்டத்து ராணி அகிலாண்டேசுவரியின் மனநிலையை அவள் பிரதிபலிக்கத் தொடங்கினாள். பெண்மையின் மென்மை, அரசியல் சதுரங்கத்தை மறந்து ஆடத் தொடங்கிற்று.

'பேடைப் புறா ஒன்று கூட்டுக்குள்ளே முடங்கிக் கிடக்கின்றது.

'அதன் இறகுகள் ஒன்றாகப் படியாமல் அலங்கோலமாகக் கிடக்கின்றன.

'கண்கள் மயக்கத்தால் மூடி மூடித் திறக்கின்றன.

'ஏ! மன்னவனே,

'உனது மயக்கத்துக்கும் அதற்கும் வித்தியாசம் உண்டு.

'நான் அவளாக இருந்தாலும், அவள் நானாக இருந்தாலும் துரதிருஷ்டம் பிடித்தவர்களே.

'வாழ்க்கைக்குக் குறைந்தபட்சம் ஒரு லட்சியம் வேண்டும்.

'யாராவது ஒருவருக்காகவாவது நீ வாழ வேண்டும்.

'அந்தப் பேடைப் புறுவுக்காக நீ வாழக் கூடாதா?'

அவள் பாடிக் கொண்டே ஆடினாள். களிப்பூட்டும் பாடல்களையே பாடி ஆடிய அவளுக்கு இந்த ரசனை எங்கிருந்து வந்தது

நல்வாழ்விழந்த பெண்ணும் மற்றொரு பெண்ணின் துயரங்களிலே தன்னை மறந்து விடுகிறாள்.

அவள் வாத்தியக்காரர்களை ஜாடை காட்டி வெளியே போகச் சொன்னாள். கவுடதேவன் அதற்குள் மேலும் குடித்துத் தள்ளாடிக் கொண்டிருந்தான்.

''நீங்கள் இரண்டு நாட்களாகச் சாப்பிடவே இல்லை; கொஞ்சம் சாப்பிடுங்கள்'' என்றாள் மாதவி.

''அதிதிகள் சாப்பிடாமல் நான் சாப்பிட மாட்டேன்'' என்று கத்தினான் கவுடதேவன்.

யார் அந்த அதிதிகள்? அவளுக்கு என்ன தெரியும்?

அவள் கதவைத் திறந்து வெளியே எட்டிப் பார்த்தாள். முன் முற்றத்தில் சில சந்நியாசிகள் நின்று கொண்டிருந்தார்கள்.

'குடித்த பின் பிறக்கும் கருணை சாதாரண காலங்களில் பிறப்பதில்லை' என்றெண்ணிய மாதவி, அந்த சந்நியாசிகளுக்கு அமுது படைக்கும்படி சேவகர்களுக்கு ஆணையிட்டாள்.

அவள் அந்தச் சந்நியாசிகளை முழுமையாகப் பார்க்கவில்லை. ஆனால் அந்தச் சந்நியாசிகளுள் ஒருவனாக முக்காடிட்டு நின்று கொண்டிருந்த ஜகந்நாத நம்பூதிரி அவளைப் பார்க்கத் தவறவில்லை.

## அத்தியாயம் 19

# நள்ளிரவில் நடந்தது!

வேர் பிடுங்கப்பட்ட அல்லிக்கொடி நிலத்திலே காய்ந்து கிடப்பது போல் துவண்டு கிடந்தாள் பத்மாவதி.

''உறவுகள் பகையாகப் போகின்றன'' என்ற உணர்வு அவளை உருக்கி எடுத்துக் கொண்டிருந்தது.

தர்மம் அதர்மம் என்பவை பற்றி எல்லாம் அவள் கேள்விப்பட்டிருக்கிறாள்.

தர்மத்தைக் காக்கக் கணவனைக் கொன்ற காப்பியத்தையும் அவள் படித்திருக்கிறாள்.

ஆனால் இல்லற வாழ்வின் தலைவாசலிலேயே தனக்கொரு பேரிடி காத்திருக்கும் என்று அவள் கனவிலும் கருதியதில்லை.

துயரங்களின் தொடக்கம் கண்ணீரில் தான்.

ஆனால் அதுவே தொடர்கதையாகி விட்டால், சிந்தனை செயலற்றுப் போகிறது.

வளமிழந்து கிடந்த பத்மாவதியை ஓரளவாவது சாப்பிட வைக்க வேண்டும் என்று தாவளி சகோதரிகள் முயன்றார்கள்.

அவளது துயரின் காரணத்தை அவர்களால் அறிந்து கொள்ள முடியவில்லை.

இரண்டொரு தினங்களாக ரவிவர்மன் இல்லம் திரும்பாததை ஒரு ரகசியத்துக்கு அடிப்படையாக அவர்கள் எடுத்துக் கொள்ளவில்லை. காரணம், அது அவர்களுக்குப் பழக்கப்பட்ட ஒன்று.

போருக்காகப் பிரிவதும், வாணிபத்துக்காகப் பிரிவதும், பரத்தையரைத் தேடிப் பிரிவதும் ஆடவருக்கு அனுமதிக்கப்பட்ட சம்பிரதாயங்கள். அந்தச் சம்பிரதாயங்களுக்குத் தன் சகோதரன் விதிவிலக்கல்ல என்பதை அவர்களும் அறிவார்கள். அந்த அனுபவம் பத்மாவதிக்கும் உண்டு.

ஓலை ரகசியத்தை அறியாத அவர்கள் பத்மாவதியைத் தேற்ற முயன்றார்கள்.

சில துயரங்களைத்தான் வார்த்தைகள் தேற்ற முடியும்; பரிமாறிக் கொள்ள

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

# ஹெடன்ஸா

களிம்பு
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

# ஜி.இ.சி.

ஆஸ்ரம்

வோல்டேஜ்
ஏற்றத் தாழ்வுகளுக்கு
ஈடு கொடுக்கும் சிறந்த பல்பு




OBM—4493A/2/TAM




# அமிர்தாஞ்சனம்

AH/7573

**தலைவலி, ஜலதோஷம் மற்றும் வலிகளுக்கு நம்பகமான நிவாரணி**

அமிர்தாஞ்சனம் சுளுக்கு, தசைவலி, உடல்வலி, தலைவலி, ஜலதோஷம் இவற்றிலிருந்து உடனடியாக குணமளிக்கிறது. அமிர்தாஞ்சனம் தடவியதும் வலி மறைகிறது. பாட்டில்கள், சிக்கனமான ஜாடிகள், மற்றும் மலிவு விலை டப்பாக்களிலும் கிடைக்கிறது.

அமிர்தாஞ்சனம் — பத்து மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்தது.

அமிர்தாஞ்சன் லிமிடெட்



# உங்கள் மனைவிக்குப் பொன்னினும் உயர்ந்த ஒரு சன்மானம்- வாழ்நாள் முழுதும் கிடைக்கும் வருமானம்

# எல்.ஐ.ஸி.யின் கிருஹலட்சுமி பாலிஸி

## இல்லத்தரசிகளுக்கு பணப் பாதுகாப்பளிக்க எல்.ஐ.ஸி. அளிக்கும் அரிய திட்டம்

(இளம் தம்பதிகளுக்கும் புதுமண தம்பதிகளுக்கும் கவர்ச்சியூட்டும் ஒரு திட்டம்)

சர்வதேச மகளிர் ஆண்டிலே இல்லத்தரசிகளுக்கு எல்.ஐ.ஸி. அளிக்கிறது கிருஹலட்சுமி பாலிஸி. இதன்மூலம் அவர்களுக்கு மாதாந்தர வருமானம் கிடைப்பது உறுதி. மற்றோர்களின் அண்டி வாழ்வதிலிருந்து விடுதலை அளிக்கிறது.

மனைவியிடம் தனக்குள்ள அன்பை வெளிப்படுத்த கணவன்மார்களுக்கு இது மிகச் சிறந்த வழிகளில் ஒன்றாகும். சன்மானம் என்னும் வகையில் இது பொன்னினும் உயர்ந்ததாகும். பொன்னில் செய்யும் முதலீடு முடங்கிவிடுகிறது. ஆனால் இதில் செய்யும் முதலீடோ தவறாது வருமானம் தேடித் தருகிறது— மாதம் தவறாது, வருடம் தவறாது, வாழ்நாள் முழுதும் பலனளிக்கிறது. பொன்னைத் திருடிச் செல்ல முடியும்; கிருஹலட்சுமியைத் திருட முடியாது.

இதன்மூலம் கிடைக்கும் பணம் அவளுக்கே சொந்தம்-எவரும் தொடமுடியாது. அவளுக்கு அது கிடைக்க வேண்டும் என்பதற்காகவே இப்பாலிஸியின் பேரில் கடன் கொடுக்கப் படுவதில்லை. இப்பணம் கண்டபடி செலவு செய்வதைத் தடுக்கும் நோக்கத்துடன் மொத்தமாகக் கொடுக்கப்படாமல் மாதாமாதமோ, வருடா வருடமோதான் கொடுக்கப்படுகிறது. இதன்மூலம் கிடைக்கும் பணம் எஸ்டேட் ட்யூடிக்கு விலக்கானதாகும்.

ரூ. 10 அளவுக்குக் குறைந்த தொகையைப் ப்ரீமியமாகக் கொண்ட பாலிஸிகூட உள்ளது. இதன்மூலம் 55 வயதுக்குப் பின் மாதம் ரூ. 30 ஒரு இல்லாளுக்கு கிடைக்கிறது.

உங்கள் மனைவிக்கு இது ஓர் சிறிய சன்மானமாகும். காலந் தவறாதீர்கள். 40 வயதுக்குட்பட்ட எல்லா கணவன்மார்களும் அருகாமையிலுள்ள எல்.ஐ.ஸி. கிளை அலுவலகத்தை அணுகி விவரமறிந்து கொள்ளுங்கள் அல்லது ஏஜெண்ட்டிடம் விசாரியுங்கள்.



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

*ADEUS-LIC P-1

முடியாத இரகசியங்களுக்குப் பாஷை கிடையாது.

அந்தப் பௌர்ணமி நிலவு, ஒவ்வொரு நாளும் தேய்ந்து வந்தது. சமயங்களில் தனக்குத்தானே முணுமுணுத்தது. திடீரென்று வாய்விட்டு அழுதது.

தம்பி மார்த்தாண்ட வர்மனுக்கு ஆபத்து! மெல்லிளங் கோதைக்கு ஆபத்து! தான் ரகசியங்களை வெளியிட்டு, அது நாயகனுக்குத் தெரிந்து விட்டால் தனக்கு ஆபத்து! நாயகனின் திட்டம் நம்பூதிரிகளுக்குத் தெரிந்து விட்டால், அது அவனுக்கே ஆபத்து!

இவற்றில் எந்த ஆபத்தையும் அவளால் தாங்கிக் கொள்ள முடியாது.

மனத்திலே மலையிருக்கும் போது வயிற்றிலே பசி எப்படித் தோன்றும்?

அவள் பஞ்சணையில் படுக்கவில்லை; தரையிலே பாய் விரித்துப் படுத்திருந்தாள்.

''பஞ்சணையில் சுகமான உறவு தொடங்கிய உடனே இந்தப் பகை உருவாவதற்குப் பகவதியம்மனே முடிவு செய்து விட்ட பிறகு நாம் என்ன செய்ய முடியும்?'' என்று ஆறுதல் கொள்ள முயன்றாள்.

கணவன் வரவில்லையே என்ற கவலையை விட, வந்த பின்னால் என்ன நடக்குமோ என்ற கவலையே அதிகமாக இருந்தது.

இரவோடு இரவாக ஸ்ரீரங்கத்துக்கே புறப்பட்டுப் போய்ச் சேரமான் பெருமானின் காலில் விழுந்து கதறலாமா என்று கூடக் கருதினாள்.

அனுபவித்தவர்கள் மட்டுமே அறியக்கூடிய அந்த இரகசியத் துயரத்தை, வார்த்தைகளால் விவரிக்க முடியாது.

நள்ளிரவில் அவளையும் மீறி அவள் கண்கள் மூடின:

தூக்கம் கண்களை நன்றாகத் தழுவத் தொடங்கியபோது காலடி ஓசை கேட்டது.

அவள் மெதுவாகக் கண்களை விழித்துப் பார்த்தாள்.

மங்கலான அந்த வெளிச்சத்தில் வெளுத்துப் போன அவள் கண்களில் ரவிவர்மனின் பயங்கரமான உருவம் தட்டுப்பட்டது.

எழ விரும்பினாள்; பயந்தாள்.

அழ விரும்பினாள்; அலுப்புற்றிருந்தாள்.

உபசரிக்க விரும்பினாள்; உள் அச்சம் தடுத்தது.

மௌனத்தில் அழுது கொண்டிருந்த அவள் கண்களில் மரண தேவதையே தோன்றியது போலிருந்தது.

கண்களை மூடினாள்; இமைகள் நடுங்கின.

மூடிய கண்களினாலேயே அவன் என்ன செய்கிறான் என்பதைக் கவனித்தாள்.

தாவளி சகோதரிகள் மேன்மாடத்திலேயே தூங்கி விட்டார்கள்.

ரவிவர்மன் அவளை லட்சியம் செய்யவில்லை. தன் ஆடைகளை மாற்றினான். போருக்குச் செல்லும் போது மார்பில் அணியும் கவசத்தை எடுத்து அணிந்து கொண்டான். குறுக்கும் நெடுக்குமாக வைக்கப்பட்டிருந்த குருதி படிந்த இரண்டு வாட்களை எடுத்து ஒன்றை இடுப்பிலும், ஒன்றைக் கையிலும் வைத்துக் கொண்டான்.

அவனது செய்கைகளை ஜாடையாகக் கவனித்த பத்மாவதி முடிவான மரண பயத்துக்கு வந்து விட்டாள்.

செயலற்ற நிலை — நடுங்கியபடியே கிடந்தது அந்தச் சிலை.

ராஜாஜி சிந்தனை

## மின்சாரம் போல்....

உலகில் காணப்படும் அரசியல் உட்பட சகல பிரச்னைகளும் மக்களை நம் விருப்பம் போல் நடக்கும்படி செய்வதற்கான விஷயமேயன்றி வேறன்று. பியூன் ஒருவனை நம் விருப்பம்போல் நடக்கும்படி செய்வதற்கு நாம் அன்புச் சக்தியை உபயோகிப்பதா அல்லது வெறுப்பையும் பயத்தையும் உபயோகிப்பதா? அதுதான் சத்தியாக்கிரகத்தின் தனிப் பெரும் கேள்வி. ஒரு காலத்தில் ஒரு மனிதன் கண்ணாடித் தடியைப் பட்டுத் துணியால் தேய்த்தால் அந்தக் கண்ணாடித் தடி சிறு காகிதத் துண்டுகளைத் தன்னிடம் இழுத்துக் கொள்கிறது என்பதைக் கண்டான். இப்படிக் கண்ட சக்தி சிறு சிறு காகிதத் துண்டுகளை மட்டும் இழுக்கக் கூடியதாகத் தோன்றியபோதிலும் அதுவே மலைகளைப் பொடியாக்கவும் ரயில் வண்டிகளை இழுக்கவும் நகரங்களுக்கு விளக்கேற்றவும் கூடிய பெரிய சக்தி என்று பின்னர் கண்டார்கள். அதுபோலவே அன்புச் சக்தியையும் பயன்படுத்தலாம். கணவனும் மனைவியும் சண்டை போட்டால் அந்தச் சக்தி அதனை நிறுத்திவிடும். மக்களை நம் விருப்பம் போல் நடக்கச் செய்ய முடியும். இந்தச் சக்தியை அரசியலிலும் பயன்படுத்தலாம். அதுதான் சத்தியாக்கிரகம் என்பது. அது ஆரம்பத்தில் பலமில்லாதது போல் தோன்றும். ஆனால் அது மின்சாரம் போல் அதிகப் பலம் பொருந்தியதாகும். அதேபோல் பலன்கள் காட்டக் கூடியதுமாகும்.

— **ராஜாஜி மணிவாசகம்**



**எலிகளை விரட்ட அமெரிக்காவில் புதிய சாதனம் ஒன்றைக் கண்டு பிடித்திருக் கிறார்கள். அதிலிருந்து கிளம்பும் ஒலி எலி களை எரிச்சலடையச் செய்து வீட்டை விட்டே ஓட்டி விடுமாம். அந்த ஒலி மனி தர்களைப் பாதிக்காது.**

—வீக் எண்ட் –ஆர். எம்.

ரவிவர்மன் வெளியேறும் காலடி ஓசை அந்தக் குடும்பத்தில் 'கேட்கும் கடைசி மணியோசைபோல் அவளுக் குக் கேட்டது.

முன்கூட்டியே திட்டமிட்டு யூஜி யானவை மதுரைக்கும், மாதவியைக் கொங்கு நாட்டுக்கும் அனுப்பி வைத் திருந்த ரவிவர்மன், குதிரையில் ஏறி மகோதைப்பட்டினத்தை நோக்கிப் பறந்தான்.

மகோதைப்பட்டினத்தில் பிரம் மாண்டமான ஒரு தென்னஞ்சோலைக்கு நடுவேதான் சேனை இருக்கை இருந்தது.

அமைதியான காலங்களில் பெரும் பாலான சேனைவீரர்கள் இரவிலே— தங்கள் இல்லத்துக்குத் திரும்பி விடு வார்கள்.

திருமணம் ஆகாத சுமார் இரண்டா யிரம் சேனை வீரர்கள் மட்டும் அந்த மூகாமிலே தங்குவார்கள். அவர்களுக் கென நியமிக்கப்பட்டிருந்த ஆறு காவல் தலைவர்களும் அங்கேயே தங்கு வது வழக்கம்.

படைவீரர்களின் உணவு விடுதி மூடி இருந்தது.

காற்றுக்காகச் சில வீரர்கள் பரந்த புல்வெளியில் தூங்கிக் கொண்டிருந் தார்கள்.

சுமார் ஐம்பது வீரர்கள் கையிலே தீவட்டி ஏந்தியபடி காவல் காத்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு சிலர் ஒரு மூலையில் கணப்பு மூட்டியபடி ஆடிப் பாடிக் கொண் டிருந்தார்கள்.

காவல் தலைவர்கள் ஆறு பேரும் யாரையோ எதிர்பார்ப்பது போல் காணப்பட்டார்கள்.

அவர்கள் எதிர்பார்த்தது ரவிவர் மனையே.

ஆறு காவல் தலைவர்களும் அவனது கையாட்களாக மாற்றப்பட்டிருந் தார்கள்.

மண்டபத்திலும், வெளியிலுமாகத் தூங்கிக் கொண்டிருந்த வீரர்களில் சுமார் ஆயிரம் பேர் உண்மையில் தூங்க வில்லை; மற்றவர்கள் தூங்குவதற்காகத் தாங்களும் தூங்குவது போல் நடித்துக் கொண்டிருந்தார்கள்.

இரவோடு இரவாக மார்த்தாண்ட வர்மனையும், நாராயண நம்பூதிரியை யும் தனித்தனியாகச் சிறைப்படுத்தி விடுவது என்பது ரவிவர்மனின் திட்டம்.

மூன்று காவல் தலைவர்களும், ஐந்நூறு படை வீரர்களும் நாராயண நம்பூதிரி யின் இல்லத்தை வளைப்பதென்றும், மற்றவர்கள் அரண்மனையை வளைப்ப தென்றும் ஏற்பாடு.

காவல் தலைவர்கள் எதிர்பார்த்தபடி படை மூகாமின் ஒரு மூலையில் வந்து இறங்கினான் ரவிவர்மன்.

வீரர்கள் தூங்கிக் கொண்டிருந்த இடத்துக்கும், அதற்குமிடையே ஐயா யிரம் காலடி தூரம் இருக்கும்.

ஆறு பேரிடமும் ரகசியமாக ரவிவர் மன் ஏதோ பேசினான்.

அந்த ஆறு பேரும் ஆயிரம் படை வீரர்களையும் தனித்தனியாக எழுப்பு வதற்குப் புல்வெளிக்கும், மண்டபத்துக் கும் சென்றார்கள்.

எல்லோரும் எழுந்து வரும் வரை உட்காரலாம் என்று ஒரு தென்னை மரத் தின் ஓரமாகச் சாய்ந்து உட்கார்ந்தான். ரவிவர்மன்.

பனிச்சென்று மரங்களின் மேலிருந்து ஐம்பது பேர் குதித்தார்கள். ரவிவர்மன் வாளைக் கையில் எடுக்கும் முன்பே அவனை வளைத்தார்கள். கையில் கொண்டு வந் திருந்த சால்வைகளால் அவனைப் போர்த்தி இறுக்கிக் கட்டினார்கள். அவனது குதிரையிலேயே தூக்கி வைத் தார்கள். ஓர் உருவம் அந்தக் குதிரை யில் ஏறி அமர்ந்து கொண்டது. குதிரை யைத் தொடர்ந்து அந்த ஐம்பது பேரும் ஓடினார்கள்.

குதிரை எல்லைப்புறச் சாவடிக்குப் போய்ச் சேர்ந்தது.

வஞ்சியின் சிறைச்சாலையும் அங்கே தான் இருந்தது.

அந்த ஐம்பது பேரும் அவனைச் சிறைச்சாலைக்குக் கொண்டு வந்து கட் டுக்களை அவிழ்த்து நிராயுதபாணியாக் கினார்கள்.

ஒரு தீவட்டி அவன் முகத்துக்கு நேரே தோன்றிற்று.

அந்தத் தீவட்டியின் ஒளியில் அவன் முகம் மட்டும் தெரியவில்லை; அதைப் பிடித்திருந்த நாராயண நம்பூதிரியின் முகமும் தெரிந்தது. (தொடரும்)

# கற்பனையை மிஞ்சிய கலை!





காங்கிரஸ் இணைப்பு மகாநாடு ஏற்பாடுகள் உண்டாக்கிய பரபரப்பில் சென்னையில் நடைபெற்ற அசல் பொம்மலாட்ட நிகழ்ச்சியொன்று பலரது கவனத்தைக் கவராமலே போய்விட்டது.

ஆஸ்திரேலியாவி லிருந்து வந்திருந்த பொம்மலாட்டக் குழுவினர், நிகழ்ச்சியைக் காணக் கொடுத்து வைத்திருந்த ரசிகர்களை ஒரு மாயாஜால உலகுக்கே அழைத்துப் போய் விட்டார்கள்.

ஆஸ்திரேலியாவுக்கே உரித்தான சில மிருகங்களை அறிமுகப்படுத்தி, அவைகளோடு ஒரு மந்திரக் கல்லையும் இணைத்துக் கதையை வளர்த்து, உறுதியான நம்பிக்கையே நற்பயன் தரும் என்ற கருத்தைக் குழந்தைகள் மனத்தில் உருவாக்கினார்கள்.

கற்பனையுலகம் கவின்மிகு கலையுலகமாகியது; வண்ணச் சேர்க்கைகள் வானவில்லை விஞ்சின.

பொம்மலாட்டம் இங்கிருந்து சென்ற கலை தான்; ஆனால் அதுதான் எத்தனை நவீன உத்திகளை உள்ளடக்கிக் கொண்டு உலகப் புகழ் பெருமளவில் சிறந்து நாம் பார்க்க இங்கே திரும்பி வந்திருக்கிறது! மேநாடு சென்று பட்டமும் பதவியும் பெற்றுத் திரும்பும் மைந்தனைப் பார்ப்பது போல் மெய் சிலிர்த்தோம்.

'டின்டுகேஸ்' என்ற தலைப்புக் கொண்ட அந்தப் பொம்மலாட்ட நிகழ்ச்சியில் எதை வர்ணிப்பது?....

பொம்மைகளின் அழகையா, கண்ணைப் பறிக்கும் வண்ணச் சேர்க்கையையா, ஒலி அமைப்பையா, ஒளி ஜாலங்களையா?

எதைக் கூறாமல் விடுவது ....

ஆழ்கடலில் வண்ண மீன்கள் வளைந்து நெளியும் அற்புத அழகையா?

சிறுவர்களை அடிக்கொருதரம் சிரிக்க வைத்த சின்னச் சேட்டைகளையா?

மலர்த் தோட்டத்தில் நடந்த பூஞ்செடிகளின் நவின நடனத்தையா?

வண்ணப் பறவைகள் சிறகடித்துப் பறந்த வியப்பு மிகு விந்தையையா?

கற்பனை உலகில் மகிழ்ச்சிக்குக் குறைவே யில்லை என்று உணர்த்திய எண்ணச் செழிப்பு அதையும் அளவோடு நிறுத்திக் கொள்ளுங்கள் என்ற எச்சரிக்கையையும் தாங்கி நின்றது.

இந்தக் கருத்தை வெளியிட்ட ஒரு மந்திரவாதியை மையமாகக் கொண்டு படர்ந்த கதையையும் அது பொம்மலாட்டமாக அரங்கேறிய அழகையும் வர்ணிக்க மந்திரப் பேனா தேவை!

ஆனால் நம் தேசத்துக்கே உரிய மெத்தனத்துடன் தாமதமாய் வந்த பல நூறு ரசிகர்கள் இருட்டில் தடுமாறி இருப்பவர்களையும் வஞ்சகத்தனத்தைக் கூற மந்திர மாயம் எதையும் நாட வேண்டிய இல்லை.

இந்த வேதனையைக் குறைத்தது, காட்சிக்குக் காட்சியும் காட்சிக்கு இடையேயும் ரசிகர்கள் கரகோஷம் செய்து தமது மகிழ்ச்சியைத் தெரியப்படுத்திக் கொண்டதுதான்.

— குட்டி கிருஷ்ணன்





# பொன்னியின்



## 22. மகத்தான நிகழ்ச்சி

**சிறப்புமிகு சீலம் வேண்டும்
பிறர் பெருமை போற்றுதற்கு**

“எனக்குப் பெருமை பிய்த்துக் கொண்டு போயிற்று!'' என்பதாக, 1948ல் நிகழ்ந்த ஒன்றைக் கல்கி குறிப்பிட்டுக் கொட்டி முழக்கிச் சொன்னார். அப்படி அவர் சொன்னது தம்முடைய சாதனை ஒன்றைப் பற்றிய தற்பெருமை அல்ல; இன்னொருவர் அடைந்த ஒரு சிறப்பைப் பற்றிய கொண்டாட்டப் பெருமையேயாகும். அவ்வித பெருமைக்கு உரியவர் ராஜாஜியைத் தவிர வேறு யாராய் இருக்க முடியும்?

மேற்கு வங்காள கவர்னராய் இருந்த ராஜாஜி, இந்தியாவின் கவர்னர் ஜெனரல் என்ற மிகப் பெரும் பதவியை லார்ட் மவுண்ட்பேட்டனிடமிருந்து ஏற்றது, நாட்டின் வரலாற்றிலும் அவருடைய வாழ்க்கையிலும், மகத்தானதொரு நிகழ்ச்சி. இருபது ஆண்டுகளுக்கு மேலாக அவருடனும் அவருக்காகவும் உழைத்து வந்த கல்கிக்கும் அது மகத்தான நிகழ்ச்சி. அதனால்தான் அவருக்குப் பெருமை பிய்த்துக் கொண்டு போயிற்று.

சொந்த முறையில் அடைந்த அப்பெருமையைப் பத்திரிகாசிரியர் என்ற முறையில் வாசகர்களுடன் பகிர்ந்து கொள்வதற்காக, அந்த வருடம் ஜூன் 20ம் தேதிய இதழை ராஜாஜி மலராகக் கல்கி வெளியிட்டார். அந்த மலரில் அவர் எழுதிய சிறப்புக் கட்டுரையின் தலைப்பு — ''அரியாசனத்தில் ஜனக மகாராஜர்.'' அதிலே அவர் முன்பு மிதிலையை ஆண்ட மன்னரின் வைராக்கியமும் சீலமும் பொருந்திய வரலாற்றைச் சுருக்கமாய்ச் சொல்லி அவருடன் ராஜாஜியை ஒப்பிட்டார்:

> புண்ணிய பாரத பூமியில் இன்றைய தினம் நம்மிடையே ஒரு ஜனக மகாராஜர் இருக்கிறார். பாரத நாட்டின் தென்பகுதியில் தெய்வத் தமிழகத்தில் பிறந்த புண்ணியர் அவர். அரண்மனை வாழ்வையும் ஆசிரமக் குடிசையையும் ஒன்றாகக் கருதுகிறவர். சுகத்தையும் துக்கத்தையும் சமமாக எண்ணுகிறவர். போற்றுதலினால் பூரிப்பதில்லை; வசை மொழிகளினால் ஆயாசம் அடைவதும் இல்லை. பதவியையும் அதிகாரத்தையும் அவர் தேடிச் செல்வதில்லை; அவை தேடி வரும் போது பயந்து ஒதுங்குவதும் இல்லை.....
>
> ராஜாஜி பிரதம மந்திரி பதவி வகித்ததால் பிரதம மந்திரி பதவி உயர்வு பெற்றது. அம்மாதிரியே அவர் கவர்னர் உத்தியோகம் பார்த்த காரணத்தினால் கவர்னர் பதவியும் உயர்வு அடைந்தது... இந்த 1948 ஜூன் மாதம் 21ம் தேதியன்று இந்தியாவின் கவர்னர் ஜெனரல் பதவி உயர்வு பெறப் போகிறது! இனிமேல் உயர்வதற்கு இல்லை என்று ராஜாஜியின் பதவிக் காலத்தோடு அது முடிந்துவிடவும் போகிறது!
>
> சென்ற வருஷம் ஆகஸ்டு 15ம் தேதி வரையில் இந்தியாவின் கவர்னர் ஜெனரல் பதவி மிகப் பொல்லாத பதவியாக இருந்தது. ? ல

★ ''குறிப்பிட்ட சுபமுகூர்த்தத்தில் ராஜாஜி முடிசூட்டு விழா நடந்தது. எல்லாம் பட்டாபிஷேகம் மாதிரி தான். கிரீடம் மட்டும் இல்லை.''



# புதல்வர்

சுந்தா

செய்து. அரியாசனத்தில் ஜனக மகாராஜர் வீற்றிருந்தது போல், கவர்னர் ஜெனரல் பதவியை வகிக்கக் கூடிய வைராக்கிய சிலரை அந்தப் பதவிக்குத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். அவர்கள் செய்துள்ள முடிவை நாம் போற்றிப் பாராட்டுகிறோம்.

சுத்திலேயே சுகபோகத்துக்கும் சர்வாதிகாரத்துக்கும் இணையற்ற பதவியாய் இருந்தது. இந்தியா தேசத்தின் முப்பத்தெட்டு கோடி மக்களுடைய வாழ்வை நிர்ணயிக்கும் ஏதேச்சாதிகாரம் கவர்னர் ஜெனரலுக்கு இருந்தது. வாரன் ஹேஸ்டிங்ஸ் காலம் முதல் ஜெனரல் வேவல் காலம் வரையில், பிரிட்டிஷ் கவர்னர் ஜெனரல்மார்கள், பிரிட்டிஷாரின் நன்மைக்காக இந்தியாவைச் சுரண்டுவதற்காகவே, தங்கள் அதிகாரத்தைப் பிரயோகித்து வந்தார்கள். அந்த நோக்கத்துக்காக அவர்கள் கையாண்ட அடக்குமுறைகளின் பயங்கரக் கொடுமைகளை நாமே நேரில் பார்த்திருக்கிறோம்; அநுபவித்தும் இருக்கிறோம்.

அத்தகைய கவர்னர் ஜெனரல் பதவிக்கு ராஜாஜி வரப் போகிறார்.

உலகத்திலேயே மிகப் பெரிய அரண்மனைகளில் ஒன்றில் வசிக்கப் போகிறார்.

"நெருப்பை அணைக்கும்போது சில சமயம் புகை உண்டாகும் அல்லவா? அணைந்து போன பிரிட்டிஷ் ஆட்சி விட்டுச் செல்லும் புகைதான் இப்போதைய கவர்னர் ஜெனரல் பதவி!" என்று ராஜாஜியே சொல்லி இருக்கிறார். ஆயினும் புகை சில சமயம் ராட்சஸ வடிவம் அடைவதுண்டு. பதவி கர்வம், அதிகார ஆசை என்னும் இரண்டும், இராவண, கும்பகர்ணர்களாக உருவெடுப்பதுண்டு. சுக போகம் என்னும் மோகினியாகவும் அது உருவெடுத்துவிடும்.

இதை முன்னிட்டுத்தான் நம் அரும்பெரும் வடநாட்டுத் தலைவர்கள் தீர்க்காலோசனை

இந்த மலரில் வெளியான பல படங்களில் ஒன்று, திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் ராஜாஜி வசித்த குடிசையின் படம்; இன்னொன்று: அவர் அமரப் போகும் அரியாசனத்தின் படம். கட்டுரைகளில் ஒன்றின் தலைப்பு, "ராஜரிஷி" — அதை எழுதியவர், முன்பு அந்த ராஜரிஷியின் ஆசிரமத்தில் பணி செய்து கல்கியுடன் நெருங்கிப் பழகி, அது முதல் அவருடன் இடையறாது தொடர்பும் கொண்டிருந்த கே. சந்தானம். அப்போது அவர் தில்லியில், "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகையில் துணை ஆசிரியராய் இருந்தார்.

இந்த மலரின் வெளியீட்டுத் தேதிக்கு முதல் நாள், ராஜாஜியின் பதவி ஏற்பு வைபவத்தைக் கண்டு மகிழ்வதற்காகத் தில்லிக்குப் பயணமானார் கல்கி. அவரே வேடிக்கையாய்ச் சொல்லிக் கொண்டது போல் கருட வாகனத்தில் பறந்து சென்றார் — அதாவது, டாக்டர் அழகப்ப செட்டியார் நடத்தி வந்த ஜூபிடர் கம்பெனியின் "கருடா" என்ற விமானத்தில்.

வழக்கப்படி செயலாளர் நாராயணசாமியுடன் மட்டும் அல்லாமல், மற்றும் மூவரையும் அந்தப் பயணத்தில் அவர் சேர்த்துக் கொண்டார். அப்போது பதின்மூன்று வயதுச் சிறுவனாய் இருந்த



★ கல்கியைச் சந்தித்ததில் கவர்னர் ஜெனரலுக்கு அதிக ஆனந்தமா; அல்லது கவர்னர் ஜெனரலைச் சந்திப்பதில் கல்கிக்கு அதிக ஆனந்தமா? யாருக்கு அதிக ஆனந்தம்?

★ "கல்களில் சிறந்த உழவுக் கல்லை கவர்னர் ஜெனரல் உவந்து கற்கிறார்."





இங்கிலாந்தில் கொச்சை மொழியில் எந்தப் பெண்ணாவது "I have a bun in the oven" என்று சொன்னால், அவள் கர்ப்பமாக இருக்கிறாள் என்று அர்த்தம் !

பாபு - டெக்கான் ஹெரால்ட்

ராஜேந்திரன் — வைபவக் காட்சிகளைத் தம்முடன் கண்டு அனுபவிப்பதற்காக; எல்லிஸ் ஆர். டங்கன் அக்காட்சிகளைப் படம் பிடித்துக் கொடுப்பதற்காக ; ஓவியர் சந்திரா — தமது 'அலையோசை' தொடர் கதையில் பின்னர் வரப் போகும் காட்சிகளைத் தம்முடன் கண்டு சித்திரம் வரைந்து தருவதற்காக.

ஜூன் மாதத்துக் கோடையில் அனல் வீசும் பிற்பகல் நேரத்தில், தில்லியை அடைந்த அக்கோஷ்டியாரில், புகைப்பட நிபுணர் இம்பீரியல் ஹோட்டலில் தங்க, மற்ற நால்வரும் கே. சந்தானத்தின் கனாட் பிளேஸ் இல்லத்தில் தங்கினார்கள்.

மறு நாள் பிற்பகலில், கல்கத்தாவிலிருந்து பாலம் விமான நிலையத்தில் ராஜாஜி வந்திறங்கிய காட்சியைக் கல்கி கண்டு மகிழ்ந்தார் — இசை முழக்கத்துடன் முப்படை அணிவகுப்பு மரியாதை; பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேருவும் மற்றோரும் அளித்த வரவேற்பு; நேருவின் துணையுடன் ராஜாஜி காரில் அமர்ந்து நகரை நோக்கிப் புறப்பாடு முதலியன.

அடுத்தாற்போல், அரசாங்க அரண்மனையில் ராஜாஜியை வரவேற்ற காட்சி. அதை வரலாற்று நோக்குடனும் தனிப் பெருமையுடனும் கல்கி கண்டார் :

பல முறை இதற்கு முன்னால் நான் தில்லிக்குப் போயிருக்கிறேன் ; புது தில்லி நகரையும் பார்த்திருக்கிறேன். ஆனால் வைஸ்ராய் — கவர்னர் ஜெனரல்கள் வசித்த சர்க்கார் மாளிகைப் பக்கம் இது வரை போனது கிடையாது. ஜூன் மாதம் 20ம் தேதி மாலைதான் முதன் முதலில் அந்த மாளிகை வாசலுக்குப் போனேன் ; அதன் பிரம்மாண்டத்தைப் பார்த்துப் பிரமித்தேன்.

புதுதில்லி நகரத்தை நிர்மாணிப்பதற்கு முதலில் 16 கோடி ரூபாய் திட்டம் போட்டார்கள் என்றும், அது 100 கோடி ரூபாயில் வந்து நின்றது என்றும் கேள்விப்பட்டேன். அந்த நூறு கோடி ரூபாய் நகரத்துக்கு நடு நாயகமாய் விளங்குகிறது கவர்னர் ஜெனரல் மாளிகை. இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் சுரண்டிய பணத்தில் இந்த நூறு கோடி ரூபாயை நல்ல முறையில் உபயோகப்படுத்தினார்கள் என்று சொல்ல வேண்டும். இப்போது அவ்வளவும் நம்முடைய தேசியப் பொதுச் சொத்தாக இருக்கிறது அல்லவா ?

எனினும், இத்தகைய பிரும்மாண்டமான மாளிகையைக் கட்டியவர்கள், அதைக் கட்டுவதற்குத் திட்டம் போட்டபோது, அதில் ஒரு காலத்தில் முரட்டுக் கதர் வேஷ்டியும் ஜிப்பாவும் அணியும் ஒருவர் வசித்து ஆட்சி செலுத்துவார் என்று கனவிலும் கருதியிருக்கமாட்டார்கள். இந்த விஷயத்தைப் பற்றி நான் சிந்தனை செய்து, ''குடிசையையும் அரண்மனையையும் ஒன்றாகக் கருதக்கூடியவர் ஒருவர்தான் இந்த மாளிகையில் வசிப்பது நியாயம்'' என்று எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில், ராஜாஜியின் கார் வந்து நின்றது. அதே சமயத்தில் மாளிகைக்கு உள்ளிருந்து மவுண்ட்பேட்டன் தம்பதிகளும் அவர்களுடைய புதல்வி லேடி பமீலாவும் வந்து சேர்ந்தார்கள்...

படைகளைப் பார்வையிட்டுவிட்டு ராஜாஜி மேலே ஏறி வந்ததும், மவுண்ட்பேட்டன் தம்பதிகள் நெடுநாளைய சிநேகிதரை வரவேற்பது போல் அவரை வரவேற்றார்கள். மவுண்ட்பேட்டன் முதலில் ஒரு ஸல்யூட் போட்டார் ; அப்புறம் ஒரு கும்பிடு போட்டார் ; அப்புறம் கையைப் பிடித்துக் குலுக்கினார் ; அப்புறம் ஆலிங்கனமே செய்து கொண்டார்.

இரட்டை கவர்னர் ஜெனரல்களை அங்கு வந்திருந்தோர் எல்லாரும் சூழ்ந்து கொண்டார்கள். ஒரு நிமிஷம் கலகலப்பான பேச்சும் சிரிப்புமாய் இருந்தது. பிறகு பழைய கவர்னர் ஜெனரல் புது கவர்னர் ஜெனரலை உள்ளே அழைத்துச் சென்றார்.

(கல்கி இதழ் 11-7-48)

அன்று மாலை, பழைய தில்லியில் உள்ள காந்தி மைதானத்தில், பிரதம மந்திரியின் தலைமையில் மவுண்ட்பேட்டன் தம்பதியருக்குப் பிரிவுபசாரம்—ஒரு லட்சத்துக்கு மேல் மதிப்பிடக் கூடிய மக்களின் கூட்டம் — மேடையின் முகப்பில் தம்பதியர் நின்று விடைபெற்றுக் கொண்டு கைகூப்பல்.

மறு நாள் காலை, பிரிட்டிஷ் ஆட்சியின் கடைசி கவர்னர் ஜெனரல் இங்கிலாந்துக்குப் பயணமாதல் — அவரையும் அவருடைய பத்தினியையும் மாளிகையின் தலை வாசல் படிக்கட்டு வரை ராஜாஜி வந்து வழி அனுப்புதல்.

அதற்குச் சற்று நேரம் பொறுத்து அந்த மகத்தான வேளை :

காலை பத்து மணியிலிருந்தே கவர்னர் ஜெனரல் மாளிகையின் தர்பார் மண்டபத்தில், அழைக்கப்பட்ட பிரமுகர்கள் வரத் தொடங்கிவிட்டார்கள். பிரதம மந்திரி நேரு தமது செல்வக் குமாரி இந்திரா நேருவுடன்


அழுக்கினை அறவே ஒழித்திட
ஒரு புதிய வழி
புதிய
ரம்யா
ஆழ்ந்து சுத்தமாக்கும்
டிடர்ஜண்ட்
விஞ்ஞான முறையில் தயாரிக்கப்படும் புதிய ரம்யா, துணிகளிலுள்ள அழுக்கை விரைவில் நீக்குகிறது.
இரண்டு ஆண்டுகால ஆராய்ச்சிக்கும், சோதனைக்கும் பிறகே, இதை நாங்கள் உறுதியாகக் கூறுகிறோம். புதிய ரம்யா விலுள்ள சர்பேக்டன்ட் துணிகளில் எங்கெங்கு அழுக்கு படிந்திருந்தாலும் அதனை அறவே ஒழித்து, துணிகளை மிகச் சுத்தமாகவும், மிருதுவாகவும் மாற்றுகிறது.
NEW
RAMYA
DEEP CLEANSING DETERGENT
SCIENTIFICALLY TESTED FORMULA
-WASHES SPOTLESSLY CLEAN
NEW
RAMYA
வில்லைகளாகவும், மிருதுவான பைகளிலும் கிடைக்கும்.
அழுக்குத் துணி வெளுக்க —பளிரென ஒளி வீச
அல்ட்ராமரீன் & பிக்மண்ட்ஸ் லிமிடெட், ராணிப்பேட்டை, தமிழ்நாடு.
SAA/UPL/1875



டாக்டர் வே. ராகவனின் இரண்டாவது மைந்தன் (ப்ளாரிடா யுனிவர்ஸிட்டியைச் சேர்ந்த) டாக்டர் சாருநந்தனுக்கும் (சுந்தரம் மோட்டார்ஸ்) ஸ்ரீ கே. எஸ். மணியின் இரண்டாவது புதல்வி சௌபாக்யவதி தாரிணிக்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!


**1898**
**முதல் பிரசித்தி பெற்றது**

பண்டிட் D. கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்கியத்திற்கும்
பலத்திற்கும்

**ஆயுர்வேதாஸ்ரமம்**
பிரைவேட் லிமிடெட் - சென்னை-17.




## திருமணம்

கல்கி காரியாலய அக்கௌண்டெண்ட் திரு N. மார்க்கபந்து அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி லக்ஷ்மி தாராவுக்கும், ஸ்ரீ R. K. ராமச்சந்திர அய்யர் அவர்களின் குமாரர் அபுதாபி டெலிபோன் கார்ப்பரேஷனில் (Gulf State) என்ஜினியராகப் பணியாற்றும் சிரஞ்சீவி R. தியாகராஜனுக்கும், 11-2-76ல் தர்மபிரகாஷில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கும் அன்று மாலையில் நடைபெற்ற வரவேற்புக்கும் உறவினர்களும், நண்பர்களும் வருகைதந்து மணமக்களுக்கு வாழ்த்துக் கூறினர்.

வாழ்க மணமக்கள்!

வந்தார். காங்கிரஸ் தலைவர்கள் பாபு ராஜேந்திரப் பிரசாத், இந்திய சட்டசபைத் தலைவர் மவ்லங்கர், மற்ற மந்திரிகள் வந்தார்கள்.....

சரியாக மணி 10–30 அடித்ததும் வாத்திய கோஷங்கள் முழங்கின. இராணுவ உடை தரித்த மெய்க்காவலர்கள் முன்னும் பின்னும் புடைசூழ்ந்து வரப் புது கவர்னர் ஜெனரல் மண்டபத்தில் பிரவேசித்தார். அனைவரும் எழுந்து நின்று மரியாதை செய்தார்கள். ராஜாஜி உட்கார்ந்த பிறகு எல்லாரும் உட்கார்ந்தார்கள். பிறகு ராஜாஜி விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டபோது, மறுபடியும் எழுந்து நின்றார்கள். ராஜாஜியின் அற்புதமான் பிரசங்கத்தை உட்கார்ந்து கேட்டார்கள். அதிலே ராஜாஜி தமது சகாக்களைப் பற்றிக் குறிப்பிட்டபோது எல்லாருக்கும் மெய் சிலிர்த்தது. ''இந்திய அரசாங்கத்தை நடத்தும் என்னுடைய சகாக்களுக்கு இனி தேச நலத்தையும் தேசத்தின் கௌரவத்தையும் தவிர, வாழ்க்கையில் வேறு எவ்வித சிரத்தையும் கிடையாது'' என்று ராஜாஜி கூறினார்.

பிரசங்கம் முடிந்த பிறகு, ''ஜன கண மன'' என்னும் தாகூரின் தேசிய கீதத்தை வாத்தியங்கள் முழங்கின. முப்பத்திரண்டு குண்டுகள் 'டும்' 'டும்' என்று எதிரொலி செய்து ஒலித்தன....

தர்பார் மண்டபத்தின் பிரதான மேடையில் இரண்டு சிம்மாசனங்கள் போடப்பட்டிருந்தன. பிரிட்டிஷ் வைஸராய் – கவர்னர் ஜெனரல்கள் தம்பதியாகத்தான் வருவார்கள். தர்பார் வைபவங்களில் இருவரும் இரண்டு சிம்மாசனங்களிலும் அமர்வார்கள்.

ஆனால் இந்த வைபவத்தின்போது ஒரு சிம்மாசனத்துக்குத்தான் உபயோகம் இருந்தது. இன்னொரு சிம்மாசனம் வெளிப் பார்வைக்குக் காலியாகவே தோற்றம் அளித்தது. ஆனால் என் மனக் கண்ணின் முன்னால் அந்த இரண்டாவது சிம்மாசனத்தில் காந்தி மகான் அமர்ந்து, பெரும் பொறுப்பை ஏற்கும் ராஜாஜிக்கு ஆசி கூறுவது போலவும், ''எந்த லட்சியத்துக்காக நான் உயிர்த் தியாகம் செய்தேனோ, அதை மறந்துவிடாதீர்கள் !'' என்று சபையோரைப் பார்த்துச் சொல்வது போலவும் தோன்றியது...

இல்லிமா நகரம் ஏற்கனவே எட்டு சாம்ராஜ்யங்களின் தலைநகராய் இருந்திருக்கிறது. இப்போது ஒன்பதாவது இந்திய சாம்ராஜ்யம் அந்த மகாநகரில் ஆரம்பமாயிற்று. அந்த வைபவத்தைக் கண்டு ஆனந்தித்தேன்.

(கல்கி இதழ் 18-7-48)

இவைதக் கல்கி சென்னைக்குத் திரும்பிய பிறகு ஆறஅமர எழுதினார். ஆகவே அவருடைய ஆனந்தம் இதில் அடக்கமாகவே இருக்கிறது. அந்த மகத்தான வைபவம் நிகழ்ந்த அன்றைய தினத்தில் அவருடைய ஆனந்த உணர்ச்சி எவ்வளவாய் இருந்திருக்கும் ? வைபவத்தி



கணவன் : **இன்று ஆபீஸில் ஒரே சண்டை. எதைப் பார்த்தாலும் கண்டதுண்டமாக வெட்டிப் போட வேண்டும் போல் ஆத்திரமாக வருகிறது.**

மனைவி: **அப்பாடா! விறகு உடைக்க ஆள் இல்லையே என்று நினைத்துக்கொண்டிருந்தேன் : வாருங்கள்!**

— முத்து

---

விருந்து திரும்பியவுடன் அதை வெளிப்படுத்தும் விதத்தில் அவர் ஏதேனும் சொன்னாரா என்று ராஜேந்திரனைக் கேட்ட போது, இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு தமக்கு ஏதும் தெளிவாய் நினைவில் இல்லை என்று சொன்னார். அவருக்கு நினைவில்லா விட்டாலும், அந்த மகத்தான தினத்தன்றே டி. கே. சிக்குக் கல்கி எழுதிய கடிதம் ஒன்றிலிருந்து, அவருடைய உடன் உணர்ச்சியை அளவிட்டுப் பார்க்க முடிகிறது :

இன்று காலையில், குறிப்பிட்ட சுபமுகூர்த்தத்தில் ராஜாஜி முடிசூட்டு விழா நடந்தது. எல்லாம் பட்டாபிஷேகம் மாதிரிதான். கிரீடம் மட்டும் இல்லை. இங்குள்ள அரசாங்க அரண்மனையின் விசாலமும் உன்னதமும் பார்த்தால் ஒழிய நம்ப முடியாது. காந்தி ஆசிரமத்துக் குடிசையிலிருந்து, இந்தியாவிலேயே மிகப் பெரிய அரண்மனைக்கு வந்து சேர்ந்த தலைவர், தர்பார் மண்டபத்துச் சிம்மாசனத்துக்கு நடந்து வந்தபோது, பரம்பரையாகச் சாம்ராஜ்யம் ஆண்ட சக்கரவர்த்தி நடந்து வருவது போலத்தான் இருந்தது. அதே சமயத்தில் எந்த நிமிஷத்திலும் இந்த அரண்மனைத் தூசியை உதறிவிட்டு வெளியேறத் தயாராய் உள்ள தபோ முனிவர் வருவது போலவும் இருந்தது.

''ராஜாஜி முடிசூட்டு விழா'' நடந்தேறிய பிறகு, கல்கியும் கோஷ்டியாரும் அந்த ஒன்பதாவது சாம்ராஜ்யத்தின் தலைநகரிலே ஐந்து நாட்கள் தங்கி இருந்தார்கள். அத்தனை நாட்களிலும், அவர்கள் அந்நகரின் பழைய புதிய பகுதிகளில் அருங் கோடையைப் பொருட்படுத்தாமல் சுற்றினார்கள். அவர்கள் சுற்றிப் பார்த்த இடங்களில் பல, பின்னர் ''அலையோசை'' நாவலின்



**பொருளாதாரம் புரிந்தவர்!**

''லாபம் சம்பாதிப்பது பாபம் என்பது சோஷலிஸ்ட் கருத்து. ஆனால் நஷ்டம் சம்பாதிப்பதுதான் உண்மையான பாபம் என்பது என்னுடைய கருத்து.''

— வின்ஸ்டன் சர்ச்சில் - ஹிம்மத் — பாலி

---

காட்சிகளாய், குறிப்பாக நான்காம் பாகத்தில், இலக்கிய வடிவம் கொண்டன—உற்றார் உறவினரையும் உடைமைகளையும் பறி கொடுத்துவிட்டுப் பஞ்சாபிலிருந்து அகதிகள் ஓடி வந்த பாதைகள், குருக்ஷேத்திரம், பானிபத், புராணகிலா முதலியவற்றில் அவர்கள் தங்கி இருந்த முகாங்கள், காந்தி மகான் சுடுபட்டு வீழ்ந்த பிர்லா மாளிகைத் தோட்டம், அவருடைய அந்திம யாத்திரை சென்ற மார்க்கம், அவருக்குத் தகனக்கிரியை நடந்த யமுனைக் கரை முதலியன.

அவற்றை எல்லாம் கல்கி, முன்பு தாம் அறிந்திருந்த நிகழ்ச்சிச் செய்திகளை நினைவிற் கொண்டு பின்னோக்கிப் பார்த்து, அவற்றிலே சிதா, தாரிணி, சூரியா முதலானோரின் அனுபவங்களைக் கற்பனை செய்தார். நாவலில் வரும் அந்தக் காட்சிகளிலும் அவற்றில் நிகழும் சம்பவங்களிலும், ஓர் ஆவணத் தன்மை (a documentary nature) இருப்பதைக் காணலாம்.

ஏற்கனவே, ''அகக் கடலோசை'' என்ற அத்தியாயத்தில் சொன்னபடி, தில்லிக் காட்சிகள் சிலவற்றைக் கல்கி பார்வை இடுவதற்கு, இந்த வரலாற்றின் ஆசிரியன் துணையாய் இருந்தான். அப்போது, தந்தை என்ற முறையில் கல்கி நடந்து கொண்ட விதத்தைக் கவனிக்க முடிந்தது. ரொம்பவும்தானே அவர் மகனைப் பொற்றிப் பொற்றி வைத்துக் கொண்டிருந்தார். தங்கியிருந்த கனாட் வட்டத்தில் கூட அவன் தனியே சுற்றிவர அனுமதிக்காமல் இருந்தார். ஒருநாள் அவர் இளைப்பாறிக் கொண்டிருந்தபோது, ராஜேந்திரனைக் கொஞ்சம் வெளியே கூட்டிப் போய் வருவதாகச் சொன்னபோது, தயக்கத்துடன் தான் அதற்கு அவர் சம்மதித்தார். ''ரொம்ப தூரம் போகாமல் பத்திரமாய்த் திருப்பிக் கொண்டு விடவேண்டும்'' என்று எச்சரிக்கை செய்தார். மகனிடமும் ''தம்பி! ஜாக்கிரதை!'' என்று எச்சரித்தார். அத்துடன் நிற்காமல் ஏதோ வரைந்து கொண்டிருந்த சந்திராவை அந்த வேலையிலிருந்து கலைத்து, பக்கத் துணையாக அனுப்பி வைத்தார். அப்படி அவர் தமது பாசத்தைப் பயமாகவும் கவலையாகவும் வெளிப்படுத்தினால், தைரியமும், தன்னம்பிக்கையும் அற்றவனாய் மகன் வளர்ந்துவிட மாட்டானோ என்று எண்ணத் தோன்றியது. நல்லவேளை, அப்படி நேரவில்லை.

சிறுவனாபடியால் ராஜேந்திரனைச் சில நிகழ்ச்சிகளுக்குக் கல்கி கூட்டிச் செல்ல முடியவில்லை. அவற்றில் ஒன்று, ராஜாஜியின் பதவி ஏற்புக்கு முதல்நாள் இரவு மொகலாயத் தோட்டத்தில் நடந்த பெரிய விருந்து. அப்போது தான் முதல் தட்வையாக அரசாங்க அரண்மனையின் உட்புறத்தில் ஒரு பகுதியைக் கல்கி பார்க்க முடிந்தது.

அந்த அரண்மனைக்கு உள்ளேயே ராஜாஜியின் விருந்தாளியாய்த் தங்கி இருக்கும் பெருமையை அடுத்த ஆண்டு செப்டம்பர் மாதத்தில் கல்கி அடைந்தார். சொந்த உறவாடலாய் அவர் அங்கே தங்கியதால் அது பற்றிக் கட்டுரை ஏதும் அவர் எழுதவில்லை. மகனுக்கு மட்டும் ஒரு கடிதம் எழுதித் தமது பெருமையான அனுபவங்களைத் தெரிவித்தார்.

*(5–9–49)* நேற்று சாயங்காலம் தில்லிக்குச் சௌக்கியமாக வந்து சேர்ந்தேன். விமானக் கூடத்தில் கவர்ன்மெண்டு ஹவுஸ் கார் வந்திருந்தது. ஒரு ஏ. டி. சி.யும் வந்திருந்தார். அவர் பெயர் காப்டன் தேவேந்திர சிங். கல்கத்தாவில் ராஜாஜிக்கு ஏ. டி. சி.யானவர், போக மனசில்லாமல் இன்னும் இருந்துகொண்டிருக்கிறார். காப்டன் தேவேந்திர சிங் ரொம்ப நாளாக ராஜாஜியிடம் இருப்பதால் கொஞ்சம் தமிழ் பேசக் கற்றுக் கொண்டிருக்கிறார்.

கவர்ன்மெண்ட் மாளிகையில் விருந்தாளியாய் வருகிறவர்களுக்குத் தனித்தனியாக அறை கொடுக்கிறார்கள். ஒவ்வோர் அறைக்கும் ஒரு பாத்ரூம் இருக்கிறது. குளிர் காலத்தில் தணல் போட இடமும் வெய்யில் காலத்தில் குளிரச் செய்யும் இயந்திரமும் இருக்கிறது.

சாயங்காலம் கவர்ன்மெண்டு ஹவுஸைச் சேர்ந்த மைதானத்தில் கால் பந்துப் போட்டி நடந்தது. இருபத்தொரு செட்டுகள் ஆடிய பிறகு நேற்றுக் கடைசி ஆட்டம். ஜயித்த கட்சிக்குக் கவர்னர் ஜெனரல் கப்புகள் கொடுத்தார். இங்கேதான் ராஜாஜியை நான் பார்த்தேன்.

கால் பந்து விளையாட்டுப் பார்த்துவிட்டு வந்து குளித்த பிறகு, (ராஜாஜியின் குமாரர்) ஸ்ரீ நரசிம்மன் என்னை டி. கே. பட்டம்மாளின் கச்சேரிக்கு அழைத்துப் போனார். கவர்னர்

ஜெனரல் 4 மணிக்குப் போய் ஒரு மணி இருந்துவிட்டுத் திரும்பி விட்டாராம்...

இராத்திரி 8–30க்குக் கவர்னர் ஜெனரலுடன் டின்னர். நாங்கள் இரண்டே பேர் தான். ஸ்ரீ தேவதாஸும் ஸ்ரீமதி லக்ஷ்மியும் வந்து கொஞ்ச நேரம் பேசிவிட்டுத் திரும்பி விட்டார்கள்.

இராத்திரி பத்து மணி வரையில் பேசிக் கொண்டிருந்துவிட்டு அறைக்குத் திரும்பினேன். நல்ல தூக்கம் போட்டேன். நீயும்கூட நேற்று இரவு நல்ல தூக்கம் போட்டிருப்பாய். ஏனெனில், டிரங்க் டெலிபோனில் கூப்பிட்ட போது ஆனந்திதான் பேசினாள். நீ தூங்கிவிட்டாய் என்று சொன்னாள்.

இன்று காலையில் ஆறு மணிக்கு வெறும் காப்பி. எட்டு மணிக்கு டிபன் அறையிலேயே சாப்பிட்டேன். நரசிம்மன் மாமா வந்து மாளிகை வாசலில் கார்டுகள் மாற்றும் வைபவத்தைப் பார்க்க அழைத்துப் போனார். அதாவது சைனியத்திலிருந்து 300 பேர் கவர்ன்மெண்ட் ஹவுஸ் காவலுக்காக வருவார்கள். ஒரு மாதம் இருந்துவிட்டுப் போவார்கள். புதிதாக வருபவர்களிடம் அவர்கள் சார்ஜ் கொடுக்கும் காரியம் சினிமாவைப் போல் தமாஷாக இருக்கிறது.

மறந்து போனேன். நரசிம்மன் மாமா பில்லியர்டு பந்து ஆடும் அறைக்கு என்னை அழைத்துப் போனார். பந்துகள் திண்டாடின!

ஒரு விஷயத்தை இதில் கல்கி எழுதாமல் விட்டு விட்டார். அதாவது, அந்த அரண்மனையை அடுத்த தோட்டத்தின் ஒரு பகுதியில் ராஜாஜி வளர்த்திருந்த புன்செய்ப் பண்ணையைப் பார்த்ததைப் பற்றி. உணவு தானியப் பற்றாக்குறையைத் தீர்ப்பதற்கு ஓர் உபாயமாயும், உதாரணமாயும் அதை வளர்த்திருந்தார் ராஜாஜி. அது பற்றி ஏற்கனவே தமது ஜூலை 31 இதழில், சிறப்புக் கட்டுரை ஒன்றைக் கல்கி வெளியிட்டிருந்தார். அத்துடன் ராஜாஜி ஏர் பிடித்து உழும் இரண்டு படங்களையும் போட்டிருந்தார். அவற்றில் ஒன்றுக்கு, ''கலைகளில் சிறந்த உழவுக் கலையை கவர்னர் ஜெனரல் உவந்து கற்கிறார்'' என்று வர்ணனை கொடுத்திருந்தார்.

கல்கி சென்றிருந்த சமயத்தில் சோளப் பயிரின் முதல் அறுவடை நடந்திருந்தது. அந்தப் புதுச் சோளத்தை அரைத்த மாவின் ஒரு சிறு பகுதியை அம்மாதம் 11ந் தேதி எட்டயபுரத்தில் நடைபெறவிருந்த பாரதி விழாவின் உபயோகத்துக்கென கல்கியிடம் ராஜாஜி கொடுக்கச் செய்தார்; அத்துடன், அந்த மாவை எப்படி ருசியுள்ள தின்பண்டங்களாய் ஆக்குவது என்பதற்கு, ஒரு பக்குவக் குறிப்பையும் எழுதிக் கொடுத்தார். அப்படியே கல்கி அந்த மாவைக் காணிக்கையாக எடுத்துச் சென்று சேர்ப்பித்தார்.


மார்ச் 14
அமெரிக்கச்
சிறப்பிதழ்


**கல்கி** சுதந்திரப் பிரகடனத்தின் இருநூறாவது ஆண்டினைக் கொண்டாடும் மக்களை வாழ்த்துகிறது.



படம்: இரண்டாவது நூற்றாண்டின் நினைவாக அமெரிக்க அரசு வெளியிடும் தங்கப் பதக்கத்தின் இருபுறத் தோற்றங்கள்.

முதலில் மிக உயரிய பதவியில் ராஜாஜி அமர்ந்ததைப் பார்த்ததும், இரண்டாவதாக மிகப் பெரிய அரண்மனையில் அவருடன் தங்கி அளவளாவியதும், கல்கியின் வாழ்க்கையில் பொன்னான நாட்கள். அந்த இரண்டுக்கும் இடையே கவர்னர் ஜெனரல் ராஜாஜி இருமுறை சென்னைக்கு விஜயம் செய்ததும் அப்படியே. இரண்டாவது விஜயத்தின்போது, கல்கி வீட்டில் நடந்த மங்கள நிகழ்ச்சி ஒன்றில் ராஜாஜி கலந்துகொண்டார். கலந்து கொண்டு, அதை ஒரு மகத்தான நிகழ்ச்சியாய்ச் சிறக்கச் செய்தார். (தொடரும்)

"தேங்க் யூ வெரி மச்! இதுக்கு மேலே எனக்குச் சொல்லத் தெரியலே ஸார். என் குழந்தையை எனக்கு மீட்டுக் கொடுத்திட்டீங்க. அவர் பிடிவாதமாக இருந்தப்போ எனக்கும் பயமாக இருந்தது. எப்படியோ கடைசியில் இந்த வழக்கில் என்னை ஜெயிக்க வைச்சட்டீங்க..."

அந்த இளம் பெண்ணின் கண்களில் நீர் படர்ந்து விட்டது. அவள் மடியில் அமர்ந்து துறுதுறுவென்று பார்த்துக்கொண்டிருந்த சிறுவன் அவள் கழுத்தைக் கட்டிக்கொண்டான். பென்சிலைக் கையில் வைத்து உருட்டிக் கொண்டிருந்த தினகரன் "உங்க மனசுப்படியே விவாகரத்து பண்ணிக்கிட்டீங்க. உங்கள் மகனும் உங்களுக்குக் கிடைச்சாச்சு. இனிமேல் மன நிம்மதியோடு வாழ்க்கையை நடத்துங்க..." என்று சொல்லிவிட்டு மனசுக்குள் கலகலத்துப் போனார். வெய்யிலில் முகம் பூவாக மலர்ந்திருந்தது. அவள் எழுந்து கொண்டாள். "அப்போ நான் வரட்டுமா?" என்றாள்.

"விஷ்யூ ஆல் த பெஸ்ட்" என்றார் தினகரன் அசையாமல்.

அறை வாசலை நோக்கி நடந்தாள். அவள் கையைப் பிடித்தபடி உற்சாகத்துடன் குதிநடை போட்டுக் கொண்டு போன சிறுவனைப் பார்த்தவுடன், இத்தனை நேரம் அடக்கி வைத்திருந்த தினகரனின் உள்ளக் குமுறல் கண்ணீராகப் பொத்துவிட்டது. உதடுகளை அழுந்தக் கடித்துக் கொண்டு மேஜையில் தலையைச் சாய்த்துக் கொண்டார்.

அவர் அறையை விட்டு விடைபெற்றுக் கொண்டு செல்லும் ஒவ்வோர் ஆணையும், பெண்ணையும் பார்க்கும்போதெல்லாம் எழும் குமுறல்தான் இது. மனசுக்குள் 'ஐயோ! இவ்வளவு நிம்மதியாப் போறீங்களே, அத்தனையையும் முடிச்சாச்சுன்னு நினைச்சுக்கிட்டு. உங்க காலோடு ஒட்டி நடந்து வருகிற குழந்தையை நினைச்சீங்களா?' என்று முகத்தில் அறைந்து கொண்டு கத்தவேண்டும் போலத் துடிப்பு எழும்.

ஆனால் அது அவரால் முடியாத செயல். விவாகரத்து வக்கீல் என்றே புகழ் பெற்றுவிட்ட ஒருவர் குழந்தையைப் போல் அழுகிறார் என்று வெளியில் தெரிந்தால் சிரிக்க மாட்டார்களா? ஆனால் மனசுக்குள் அழாதவர்கள்தான் யார்? ஒவ்வொரு மனிதனுடைய இதயமும் அழுது கொண்டிருந்தாலும் இமைகள் மட்டும் நனையாது. நனையவிடக் கூடாது. அதுதான் நாகரிகம்.

அழுவதற்குக்கூட ஏங்க வேண்டிய சமுதாயம். எதற்குத்தான் ஏங்கவில்லை வாழ்க்கையில்? சாயந்திரம் பம்பரத்தையும் கயிற்றையும் எடுத்துக் கொண்டு நண்பன் வீட்டுக்குப் போனால், அவன் அம்மா மடியில் படுத்துக் கொண்டு பள்ளியில் நடந்ததை யெல்லாம் சொல்லிக் கொண்டிருப்பான். அவள் மகனின் முன் னுச்சி மயிரில் கைகளை அலைந்தபடியே ஏதோ மாபெரும் இலக்கியத்தைச் சுவைப்பது போலச் சுவைத்துக் கொண்டிருப்பாள். எட்டு வயதுத் தினகரன் ஏக்கத்தோடு பார்த்துக் கொண்டு நிற்பான்.

தீபாவளிக்குத் தனக்கு இது வேண்டும், அது வேண்டும் என்று அப்பாவைக் கேட்

# பாதிப்புகள்!

டால் வாங்கித்தான் தருவார். ஆனால் கடைக்குப் போனால் அம்மாவின் வழுவழுப்பான புடவையில் உரசிக் கொண்டே எட்டிப் பார்க்கும் சிறுவர்களைப் பார்ப்பான் ஏக்கத்தோடு. பள்ளியிலிருந்து 'அம்மா' வென்று கத்திக் கொண்டு ஓடிவர விருப்பம்தான். ஆனால் 'என்னடா தினகரா!' என்று கேட்க ஆள் இல்லையே? ஐந்து மணிக்கு அப்பா வந்து காப்பி போட்டுத் தரும் வரையில் அதற்காகக் காத்திருக்க வேண்டும்.

சிறுவனாக இருக்கும்போது இருந்த ஏக்கங்களே தனி. ஆனால் வாலிப வயதில் எழும் தாகங்களே தனிச் சுவைதானே. சட்டம் படிக்கும்போது எங்கிருந்தோ வந்து சேர்ந்த சுவர்ணாவின் மயக்கும் விழிகளில் தன்னைப் புதைத்துக் கொண்டான். சிறு வயதிலிருந்து பெண்ணின் மென்மையையே உணராமல் வளர்ந்துவிட்ட குறையை யெல்லாம் அவளிடம் இட்டு நிரப்பிக் கொள்ளத் துடித்தான். அவளுடைய நீண்ட கைகளில் தன்னுடைய



அகன்ற தோள்களைப் புதைத்துக் கொண்டு விம்மத் துடிக்கும் இதயம். ஆண்மையின் ஆளுமைத் தன்மையையே அவளிடம் பொதிந்து விடவும் தயாரானான். ஆனால் அப்பா ஒத்துக் கொள்ளவில்லையே. கண்டிப்பாகவே வளர்த்து விட்ட பையன் தான் காட்டிய பெண்ணுக்குத்தான் தாலி கட்ட வேண்டும் என்று கூறினார்.

எத்தனையோ இரவுகள்... ''அம்மா! நீ இருந்தா என் கட்சியை எடுத்துச் சொல்லுவாய் இல்லையா? நான் வாதாடக் கல்லூரியிலே கத்துக்கறேன். ஆனால் டாடி கிட்டே வாதாட என்னாலே முடியலையே. நீயும் இல்லையே....'' சிறு குழந்தையைப் போலத் தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு தேம்பி அழுதிருக்கிறான்.

படிப்பை முடித்துக் கொண்டு டில்லிக்குப் போய்விட்டாள் சுவர்ணா. ஒரு பெண்ணைக் காட்டாமலே போய்ச் சேர்ந்துவிட்டார் அப்பா. பணத்துக்கும், படிப்புக்கும் வலைபோட்ட அத்தனை பேரிடமிருந்து விலகி, தனித்து, வாழ்க்கையைத் தவமாக்கிக் கொண்டு...



''என்ன... பகலிலேயே தூக்கமா...?''

நினைவுகளை இழுத்துப் பிடித்துத் தலைநிமிர்ந்தார் தினகரன். பப்ளிக் பிராஸிக்யூட்டர் நாகசாமி நின்று கொண்டிருந்தார்.

''உட்காருங்களேன். தூக்கம் ஒன்றுமில்லை. என்னமோ இன்றைக்கு 'மூட்' சரியில்லை'' என்றார் தினகரன்.

''இரண்டு மூணு நாளா உங்களுக்கு உடம்பு சரியில்லேன்னு சொன்னாங்க. இன்னிக்கு நம்ப ரெண்டு பேரும் மோத வேண்டிய நாளாச்சே. அதான் வருவீங்களான்னு கேட்க வந்தேன்'' என்று சிரித்தார் நாகசாமி.

''இல்லே. வாய்தா வாங்கிடுங்க. இன்றைக்கு நான் கோர்ட்டுக்கு வரலே.''

''ஓ. கே. அது ஒண்ணும் பெரிய கஷ்டம் இல்லே. அது சரி, இன்னும் எத்தனை நாளைக்குத்தான் இப்படி ஆஞ்சனேயர் சிஷ்யரா இருக்கப் போறீங்க? அரண்மனை மாதிரி வீடு, எக்கச்சக்கமான பணம்... என்ன சார் நீங்க, வாழ்க்கையை நீங்கள் அனுபவிக்க வேண்டாமோ...''

வெறுமனே சிரித்தார் தினகரன். ''மகிழ்ந்து குதூகலிக்க ஏது நேரம்? என் வேலையே எனக்குத் தலைக்கு மேலே இருக்கு.''

# ஷ்.மஞ்சுளா

''வேலை என்னிக்கும்தான் இருக்கும். ராத்திரி நீங்க எப்படித் தூங்கறீங்க?'' கண்ணைச் சிமிட்டிக் கொண்டே அவர் கேட்டது தினகரனுக்குப் புரிந்துகொள்ள வழி வகுத்தது.

''ஏன் தூங்காம.. ராத்திரி பதினொன்று வரைக்கும் கேஸ் கட்டுக்களைப் பார்த்தேன்னா அப்புறம் தானா தூக்கம் வர்றது'' என்றார்.

''நான் அதைக் கேக்கலே...''

''நீங்க எதைக் கேட்கறீங்கன்னு எனக்குப் புரியறது. ஆனா நானே பிரிச்சு வைக்கிற வக்கீல்னு பேர் எடுத்துட்டேன். எனக்கு எதுக்கு இணைப்பு...?''



# இடது கையால் எழுதும் முதல் அமெரிக்க ஜனாதிபதி ஃபோர்ட்.

- கே. ஆர்.

படம்: ஸ்ரீமதி ஃபோர்ட்

நாகசாமியின் குரலில் பொறுமை இழையோடியது. ''பேர்தான் எடுத்துட்டீங்களே பிரமாதமா. அது சாசுவதமா நிக்கறதோட இல்லாம, விசுவரூபமா வளர்ந்துகிட்டும் இல்லே வருது...? கல்யாணத்தன்னிக்கே விவாகரத்து பண்ணிக்கிறதுன்னு நான்தான் தினகரன் கிட்டே போவேன், நான்தான் போவேன்னு பெண்ணும் பிள்ளையும் அடிச்சுக்கறாங்களாமே....'' என்று கூறிவிட்டு 'ஹோ ஹோ' என்று சிரித்தார் நாகசாமி.

சர்வாங்கமும் பதற, ''ஐயோ! அத்தகைய புகழ் எனக்கு வேண்டவே வேண்டாம்...'' என்று காதைப் பொத்திக் கொண்டு மெல்லிய குரலில் கூறினார் தினகரன். காதை அடைத்துக் கொண்ட விரலையும் மீறித் தொலைபேசி மணி அடிக்கும் சத்தம் கேட்டது.

தொலைபேசியை எடுத்தார் தினகரன். ஹாலில் இருந்த அவருடைய பி.ஏ.வின் குரல் கேட்டது. ''உங்களைப் பார்க்க வேண்டுமென்று ஒருவர் வந்திருக்கிறார்.''

''வரச் சொல்லுங்கள் மோகன்!'' என்று கூறிவிட்டு வைத்துவிட்டார். ''யாரோ உங்களைத் தேடிண்டு வராங்க போலிருக்கு. எனக்கும் நேரமாச்சு; நான் வரட்டுமா?'' என்று கைகுலுக்கி விடைபெற்றுக் கொண்டு கிளம்பினார் நாகசாமி.

அதே சமயம் கதவைத் திறந்து கொண்டு நடுத்தர வயதுள்ள ஒரு பெண் உள்ளே நுழைந்தாள். அவளைக் கண்டவுடன் முகத்தில் ஆச்சரியம் எழுந்தது. அவரைத் தேடிக் கொண்டு வருபவர்கள் விவாகரத்து விஷயமாகத்தான் வருவார்கள். நெற்றி நிறையக் குங்குமத்தை வைத்துக் கொண்டு. ஆனால் இந்தப் பெண்ணோ தூய வெள்ளைப் புடவையை அணிந்து கொண்டிருந்தாள். இவள் தான் இறைவனாலேயே பிரிக்கப்பட்டு விட்டாளே, இந்த வக்கீல் எதற்கு இன்னும்?

மனத்தில் எழுந்த எண்ணங்களை ஒதுக்கி விட்டு அந்தப் பெண்ணை அமரச் சொன்னார். அந்தப் பெண் அவரையே இமையாமல் நோக்கினாள்.

''என்னை உங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். எனக்கு உங்களைத் தெரியும். எதற்கு நான் இந்தக் கோலத்துடன் வந்திருக்கிறேன் என்று உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கலாம். நானும் ஒரு வழக்கை எடுத்துக் கொண்டு தான் வந்திருக்கிறேன்.''

தினகரன் நிமிர்ந்து அமர்ந்து கொண்டார். ''சொல்லுங்கள். என்னால் முடிந்ததைச் செய்கிறேன்.''

இன்னும் அந்தப் பெண் அவரையே இமையாமல் நோக்கிக் கொண்டிருந்தாள். அவரால் அவளுடைய கண்களைப் பார்க்க முடியவில்லை. மேஜையின்மேல் வைத்திருந்த பென்சிலைச் சுழற்றியபடி தலை குனிந்துகொண்டார். இன்னும் தன்னை நோக்கும் கண்களில் கருணையூற்று பிறந்து அதில் தான் மூழ்கிக் கொண்டிருப்பது போல அவருக்குத் தோன்றியது. அமைதி தவழும் அந்தக் கண்களைப் பார்க்க வேண்டும் போல் ஆசையாகவும் இருந்தது. அவள் பேசிக் கொண்டிருந்தாள்:

''எனக்குத் தெரிந்த தம்பதி.... கணவன், மனைவியை வேலைக்குப் போகும்படி கட்டாயப் படுத்தினான். அவளும் சரியென்று ஒரு சின்னக் கம்பெனியில் வேலைக்கு அமர்ந்தாள். முதலாளிக்குப் பிறகு அவளுக்குத்தான் அங்கு அதிகாரம். பணமெல்லாம் அவள் கையில் புழக்கம். இவள் வேலைக்குப் போக ஆரம்பித்தவுடன் அவன் வீட்டுக்குச் சரியாகப் பணம் கொடுப்பதில்லை. இவள் சம்பளமும் போதாமல் கையில் பணம் புழங்கும்போது கொஞ்சம் எடுக்க வேண்டிய நிலை...''

''அது பெரிய தப்பில்லையா?'' இடைமறித்தார் தினகரன்.

மென்மையாகச் சிரித்தாள் அவள். அவளுடைய கண்கள் அறையை ஒரு சுற்றுச் சுற்றிக் கொண்டு மீண்டும் அவரிடம் பதிந்தன. ''ஏர்கண்டிஷன்ட் அறையில் உட்கார்ந்து கொண்டு நீதி, நியாயங்களையும் தவறு, சரியையும் பேசும் வழக்கறிஞர் நீங்கள். அதனால் நடுத்தர வர்க்கத்திலேயும் கடைசிப் படியில் நின்று கொண்டு, கௌரவத்தையும் விட முடியாமல், வருமானமும் போதாமல் வாழுகிற ஒரு கூட்டத்தின் நியாய அநியாயங்களை அளக்கும் அளவுகோலை உங்களால் தெரிந்துகொள்ள முடியாது.''

பொட்டில் அறைந்தாற்போல் அவள் சொன்ன பதில் அவரைத் திகைக்க வைத்தது. எதுவும் பேசாமல் தலை குனிந்துகொண்டார். அவள் தொடர்ந்தாள்:

''...அந்தப் பெண் பணத்தை ரோலிங் பண்ண ஆரம்பித்தாள். அதிலிருந்து எடுத்து இதில் போடுவது. இதிலிருந்து எடுத்து அதில் போடுவது... இறுதியில் ஐந்நூறு ரூபாய் துண்டு விழுந்து விட்டது. முதலாளி கண்டு பிடித்து விடப் போகிறாரே என்று பத்துப் பைசா வட்டிக்குக் கடன் வாங்கினாள். கணக்கைச் சரிசெய்து விட்டாள்.... ஆனால் கடன் கொடுத்தவர் சும்மா இருப்பாரா? அவள் கணவனோ வெளியில்கூட வரமாட்டான். இந்தச் சமயத்தில் இதைத் தீர்க்க வழி தேடி ஆபீஸ் நண்பர்களிடம் உதவி கேட்டாள். அதில் ஒருவன் அவளை இரண்டு மூன்று இடங்களுக்கு அழைத்துச் சென்றான்...''

முடிச்சுப் போட்டுக் கொண்டிருந்த புருவம் விலகிவிட்டது. மிச்சக் கதையை ஊகித்து விட்ட தினகரன் அவளை நிமிர்ந்து பார்த்தார்.

''ஆமாம்... நீங்க நினைக்கறதுதான். அவள் கணவன் சந்தேகப்பட்டான். அவளுக்குத் தெய்வம்கூட இரங்கவில்லை. அதே சமயம்



**தனது வாழ்நாள் முழுதும் வளர்ந்து கொண்டே இருக்கும் ஒரே பிராணி - முதலே.**

—கே.ஆர். 'வீக் எண்ட்'

படம்: சென்னையில், மத்திய தோல் ஆராய்ச்சி நிறுவனத்துக்குப் பிரதமர் விஜயம்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

அவன் 'பிரக்னண்ட்' ஆனுள். அவர்... அவர்....''

''புரிகிறதம்மா. அதனுல் அவர்கள் விவாக ரத்து வழக்குத் தொடரப் போகிறுர்கள். அப்படித்தானே...''

''ஆமாம். நான் எவ்வளவோ சொன்னேன். திருமணம்ங்கிறது ஆயிரம் காலத்துப் பயிர். சட்டம் அதைப் பிரிச்சுடலாம். ஆனு ஆண்டவன் படைச்ச பந்தத்தை ஆண்டவனுல்கூடப் பிரிக்க முடியாதுன்னு சொன்னேன். கேட்கலே. அவங்களுக்கு ஏற்கனவே ஒரு மகன்...'' அவளுக்குக் குரல் கம்மியது.

''கு...ழந்தை வேறே இருக்கா?'' தினகரன் நெஞ்சு அடைத்தது.

''ஆமா... என் நெஞ்செல்லாம் அதனுல் தான் எரிகிறது. அம்மா சாயந்திரம் வர்ற துக்கு நேரமாகுமே. அதனுல் அப்பா கிட்டயே வளர்ந்தது குழந்தை. அம்மா கிட்ட அவ்வளவு ஒட்டுதல் இல்லே.''

''நாளைக்குக் கோர்ட்டுக்கு வர்றப்போ..'' இழுத்தார் தினகரன்.

''கேஸ் ஜெயிச்சப்புறம் குழந்தை யார்கிட்ட வரணும்கிற பிரச்னை வர்றப்போ, அதையே கேட்பாங்க. அந்த மூணு வயசுப் பையன் அப்பா கழுத்தைக் கட்டிக்கிட்டு நிப்பான். அதனுலே...'' கண்களிலே நீர்த் திரை படரத் தலே குனிந்து கொண்டாள்.

''....தீர்ப்பு... சொல்லுவாங்க. மகன் அப்பாகிட்டேயே வளரட்டும்னு. இதுதான் நடக்கும்'' என்றுர் தினகரன்.

சட்டென்று தலே நிமிர்ந்தாள் அவள். ''ஆமா.... அதோட உங்க பிரச்னை தீர்ந்துடும். ஆனுல் சம்பந்தப்பட்டவங்க அனுபவிக்கிற போதுதானே அந்தச் சுமை என்னங்கிறது தெரியும்? அவன் வளருவான், ஸ்கூலுக்குப் போவான், படிப்பான், எல்லாம் பண்ணுவான். ஆனுல் அக்கறையா கவனிக்க.....''

திகைப்போடு அவளேயே பார்த்தார் தினகரன். அவர் நெஞ்சில் இடி இடித்துக் கொண்டிருந்தது. தானே சிறுவனுகிக் கண்களிலே ஏக்கம் வழிய....

''பையனேட அப்பா ஆண்ங்கிறதாலே சமூகத்திலே கேசெளகர்யங்க உண்டு. அவர் உடல் அரிப்பை ஈஸியா தீர்த்துக்க முடியும். திருமணம் செய்துக்காம மகனே அன்பா கண்டிப்பா வளர்க்க முடியும். ஆனுல் பத்து மாசம் சுமந்து பெத்தவ வயிறு எப்படிப் பத்திஎரியும்? யோசிப்பீங்களா, நீங்கள்ளாம்? தாயும், பிள்ளையுமா சிரிக்கப் பேசிக்கிட்டே ரோட்டில் போறப்பெல்லாம் அவ ரத்தக் கண்ணீர் வடிப்பாளேன்னு யோசனே பண்ணீங்களா?'' அமைதியான கண்களில் மெல்ல மெல்லச் செம்மை ஏறிக் கொண்டிருந்தது.

குற்றவாளியாய், குற்றத்துக்கு உடந்தை போன ஈன ஜன்மமாகத் தம்மை உணர்ந்து தலே குனிந்து கொண்டார் தினகரன்.

''அருமையான நியாயங்களைப் படைச்சிருக்கீங்க. அழகா பிரிக்கிறீங்க. ஆனுல் பின்னுல் வர்ற பாதிப்புக்களுக்கு என்ன பதில் சொல்றீங்க? வளர்ந்துவிட்ட பையன் அம்மான்னு உருகி அழறப்போ அவனுக்கு என்ன உதவி செய்யறீங்க நீங்க...? பெரிய பேர்தான் உங்களுக்கு. அருமையா வாதாடக் கூடிய வர்னு. ஆனு என்னுடைய வாதத்துக்குப் பதில் சொல்லுங்க.....''

தினகரன் தலே நிமிர்ந்தார். மேஜையின் அந்தப்புறம் அமர்ந்து கொண்டு தம்மையே நோக்கியபடி பேசும் அந்த மாதின் பார்வையில் கட்டுண்டவராய் எழுந்து கொண்டார். மேஜையைச் சுற்றிக் கொண்டு அவளருகே வந்து நின்றுர். அவளும் எழுந்து நின்றுள்.

''வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் தயங்கித் தயங்கி நின்று ஏக்கத்தையே வடிவமாக்கி, சவலேக் குழந்தையா வளருவானேன்னு நெஞ்சு நொந்து போய்க் கிடக்கிற அம்மாவுக்கு என்ன பதில் சொல்லுவீங்க?''

''ஆமா...என்னுலே ஒரு பதிலும் சொல்ல முடியாதுதான்.....'' கனவில் முணுமுணுப்பது போல் நலிந்த குரலில் சொன்னுர் தினகரன்.

''அப்...புறமா, ஒரு நாளைக்குத் தன்னையும் தாள முடியாம, அவனுக்கு என்னைத் தெரியாட்டாலும் பரவாயில்லே, நான் ஒரு தரம் பார்த்து, அவன் குரலேக் காதாரக் கேட்டுட்டு வரலாம்னு கிளம்புவா. பெத்த மகன் எதிர்க்கவே நின்னுகிட்டு நீங்க செய்யறது நியாயமான்னு கேட்டு...''

அதற்கும் மேல் பொறுக்க முடியாமல் காலும் கையும் தடுமாற நினைவு பேய்க் காற்ருகச் சுழன்று அடிக்க அப்படியே அவள் பாதங்களில் விழுந்துவிட்டார் தினகரன்.

தூய வெண்மையான புடவையில் பளிச்சிடும் பாதங்களைப் பிடித்துக் கொண்டு, ''அம்மா, என்னேட பதில் இதுதாம்மா...'' என்று கதறினுர்.

''தினகரா...!'' என்று கேவிக் கொண்டே குனிந்து அவர் தலேயைத் தன் மடியில் எடுத்து வைத்துக் கொண்டு கண்களை மூடிக் கொண்டாள் அவள்.

# மாயவரம் பைனான்ஷியல் கார்ப்பரேஷன் லிமிடெட்

பதிவு அலுவலகம்: 13-H, கச்சேரி ரோடு, மாயவரம்

உயர்தொகை ஏலச் சீட்டு நிறுவனம்

31-1-1976 முடிய

| | | |
|---|---|---|
| 1. அங்கீகரிக்கப்பட்ட மூலதனம் | ரூ. | 5 லட்சம் |
| 2. செலுத்தப்பட்ட மூலதனம் & ரிசர்வு நிதிகள் | ரூ. | 5-5 லட்சம் |
| 3. நடைமுறை சீட்டுகளின் மூலதனம் | ரூ. | 8 கோடிக்கு மேல் |

**கிளைகள் :**

மாயவரம், காரைக்கால், பாண்டிச்சேரி, கடலூர், சென்னை, காஞ்சீபுரம், கும்பகோணம், தஞ்சாவூர், சிதம்பரம்

*மாயவரம்*
*13-2-76*

R. கல்யாணசுந்தரம்
*மானேஜிங் டைரெக்டர்*

---

**வட்டி 14% வரை**

உங்கள் டெபாசிட்டுகளுக்கு
**மாயவரம் பைனான்ஷியல் சிண்டிகேட்**
வழங்குகிறது.

ரெக்கரிங் டிபாசிட்டுகளுக்கு கவர்ச்சிகரமான வட்டி விகிதங்கள் அளிக்கப்படுகின்றன

**தவணை முறையில் பொருட்கள் வாங்க எங்களை அணுகவும்.**

*மாயவரம்*
*13-2-76*

R. கல்யாணசுந்தரம்
*மானேஜிங் பார்ட்னர்*

விபரங்களுக்கு:

**மாயவரம் பைனான்ஷியல் சிண்டிகேட் (REGD.)**

**13-G, கச்சேரி ரோடு, மாயவரம் - 609001**

# ஒரு நாளில்...

**கா**லையில் நான 'வாக்கிங்' போய் வரு வதை நண்பர்கள் தேகாப்பியாசம் என்று நினைக்கிறார்கள். நான் அந்த நேரத்தை வேறு ஒரு வேலைக்காகவும் பயன்படுத்திக்கொள்ளு கிறேன். அன்று நடக்கவேண்டிய காரியங்களை ஒழுங்குபடுத்தி மனத்தில் ஒரு திட்டம் வகுத் துக்கொள்ள இந்தக் காலைநடை வெகுவாக உதவுகிறது. பல வருங்காலத் திட்டங்கள் கூட இந்த நேரத்தில் உருவாவது உண்டு.

உலாவிவிட்டு வீடு திரும்பும்போது மணி எட்டை நெருங்கிக் கொண்டிருக்கிறது.

காலை ஆகாரமாக இட்டிலி காப்பி காத்துக் கொண்டிருக்கிறது. இந்தப் பலகார வகையில் அநேகமாக மாறுதல் இருக்காது. ஸ்நா னத்தை முடித்த கையோடு காலைப் பல காரத்தையும் முடித்துக் கொள்கிறேன்.

பதிப்பகத்துக்கு வரும்போது மணி பத்து. என் உதவியாளர்களில் ஒருவர் வந்திருக்கும் தபால்களை யெல்லாம் அடுக்கிக் கொண்டு வந்து என் மேஜை மீது வைக்கிறார். பலதரப் பட்ட கடிதங்களையும் பொறுமையுடன் வரி விடாமல் படிக்கும் பழக்கம் உண்டு.

புத்தகங்களுக்கு ஆர்டர்கள் கொடுக்கும் கடிதங்கள், குறிப்பிட்ட புத்தகங்கள் எங்கு கிடைக்கும் என்று விசாரித்து எழுதும் கடி தங்கள், தான் எழுதி வைத்திருக்கும் கையெழுத்துப் பிரதியை அங்கீகரித்துப் புத் தகமாக வெளிக் கொண்டு வர வேண்டு மென்ற வேண்டுதல் கடிதங்கள், எங்கள் வெளியீடுகளில் சிலவற்றைப் படித்து மனத் துக்கு ஆறுதல் கிடைத்தது என்ற வகையில் நன்றி தெரிவிக்கும் கடிதங்கள் இத்தியாதி. இவற்றில் உடனுக்குடன் பதில் அனுப்ப வேண்டிய கடிதங்களுக்கு அவை மீதே குறிப் புக்களை எழுதி உதவியாளரிடம் கொடுத்து விடுகிறேன். கண்ணதாசன் அவர்களின் 'அர்த்தமுள்ள இந்து மதம்' புத்தகத்தைப்

**வானதி திருநாவுக்கரசு**

படித்துவிட்டுப் பாராட்டியும், தங்களைத் தாங் களே சீர்திருத்திக் கொண்டு நல்வழி நடக்க ஆரம்பித்திருப்பதாகவும் பலர் எழுது கிறார்கள். அந்த ரகக் கடிதம் இன்று கூட இரண்டு வந்திருக்கிறது. நம் வானதி பதிப் பகத்தால் இந்த அளவுக்குச் சமூகப் பணி செய்ய முடிகிறதே என்ற பெருமித உணர்ச்சி மனத்தில் எழுகிறது.

இரண்டு பேர் சந்திக்கக் காத்திருப்பதாக மற்றொரு உதவியாளர் வந்து தகவல் கொடுக் கிறார். ஒவ்வொருவராக வரச் சொல்லு கிறேன்.

முதலில் வந்தவர் தம்முடைய கையெழுத் துப் பிரதியுடனேயே வந்திருக்கிறார். அவ ருக்குத் தாம் எழுதியதைப் புத்தகமாகப் பார்க்க மிருந்த ஆவல். அவர் எழுத்துத் துறைக்குப் புதியவர்.

அவருக்கு இங்கிதமாக, உற்சாகக் குறைவு ஏற்படாத வகையில் பதில் சொல்லி அனுப்பு கிறேன். ''ஐயா! முதலில் நீங்கள் பத்திரி கைகளுக்கு நிறைய எழுத வேண்டும். அந்த முயற்சி உங்கள் திறமைக்கு மெருகூட்டும். நல்ல பயிற்சியும் அனுபவமும் கிடைக்கும்'' என்று கூறி அனுப்பி வைக்கிறேன்.

அடுத்தாற்போல் வருபவர் ஓர் அனுபவம் மிக்க ஜோசியக் கலைஞர். அவர் தம் ஜோசி யக் கலை சம்பந்தமான புத்தகம் ஒன்றைப் பிரசுரிக்க வேண்டுகிறார். எனக்கு ஜோசி யத்தில் நம்பிக்கை இல்லை என்று நான் சொல்லவில்லை. ஆனால், நான் பிரசுரிக்கும் வானதி வெளியீடுகளில் இந்த ரகத்தைச் சேர்த்ததில்லை. ஆகவே அவரை எனக் குத் தெரிந்த வேறு ஒரு பிரசுரகர்த்தரைப் பார்க்கும்படி அனுப்பி வைக்கிறேன்.

**சி**ந்தாதிரிப்பேட்டையில் உள்ள வாரியார் சுவாமிகள் இல்லத்தின் வாயிலில் போய் இறங்கும்போது மணி பன்னிரண்டு. ஞாபக மாகக் கையோடு எடுத்து வந்திருக்கும் 'கந்தர் அலங்கார' புத்தகத்தின் ஐந்தாவது பதிப்பின் பிரதியுடன் வாரியார் அவர்கள் முன் போய் நிற்கிறேன். இது அவர் எழுதிய விளக்க நூல். அட்டையில் முருகனின் திருவுருவம் பல வண் ணங்களில் அமைந்திருக்கிறது.

கையில் புத்தகத்தை வாங்கிப் பார்த்த வாரியார் சுவாமிகள் அந்த அட்டைப் படத் தைப் பார்த்துக் கொண்டே சில விநாடிகள் மெய்மறந்து நிற்கிறார். ''ஆஹா! என் முரு கனுக்கு இத்தனை அலங்காரமா? பிரமா தம். அவனே அழகன்! அவனை நீங்கள் மேலும் அழகு படுத்தியிருக்கிறீர்கள். அற்புதம்'' என்று ஆனந்தத்தில் மூழ்குகிறார்.

அந்தக் கணத்தில் எனக்கு அமரர் ராஜாஜியின் நினைவு வருகிறது. ராஜாஜி அவர் களின் ராமாயணத்தைப் பதிப்பித்த போது, முதல் பிரதியுடன்



## ஒரு பூஜ்யம் அதிகம்!

விம்பிள்டன் பந்தயங்கள் நடக்கும் இரண்டு வார காலத்தில் மொத்தம் 1,50,000 டென்னிஸ் பந்துகள் உபயோகப்படுத்தப்படும் என்று டிட்பிட்ஸ் பத்திரிகை எழுதியிருந்தது. இந்தக் கணக்கு சரியாக இருக்குமா? டென்னிஸ் கிருஷ்ணன் அவர்களிடம் கேட்டேன். அவர் கூறிய விவரங்கள்:



''இந்தக் கணக்கில் ஒரு சைபர் அதிகமாக வந்துவிட்டது. அவ்வளவுதான். நான் கணக்குப் போட்டுப் பார்த்தேன். ஒற்றையர், இரட்டையர் பந்தயம், பெண்கள் ஒற்றையர் - இரட்டையர் பந்தயம், மிக்ஸ்ட் டபிள்ஸ், வயதானவர்களுக்கான பந்தயங்கள், சிறுவர், சிறுமியர் பந்தயங்கள், Plate Matches, பந்தயத்துக்கு முன்னதாக நான்கு நாட்கள் விளையாடும் பிராக்டீஸ் விளையாட்டுக்கள் இவ்வளவுக்கும் உபயோகப்படுத்தப்படும் பந்துகளைக் கணக்கில் எடுத்துக்கொண்டு பார்த்தேன். கிட்டத்தட்ட 15,000 வந்தது. இதுதான் சரியாக இருக்கும்.''

- கே. ஆர்.

---

அவரைச் சந்திக்கச் சென்றிருந்தேன். அவர் வரச் சொன்ன தினத்தன்று புத்தகத்துக்கான அட்டை தயாராகவில்லை. எனவே மறுநாள் தான் போனேன்.

ராஜாஜி அவர்கள் புத்தகத்தை வாங்கிப் பார்த்தார். ''இதில் எனக்கு அட்டைப் படம்தான் தெரிகிறது. வேறு ஒன்றும் தெரியவில்லை. இதற்காகத்தான் இத்தனை தாமதமா?'' என்று வார்த்தைகளை ஒரு சொடுக்கு சொடுக்குகிறார்!

ராஜாஜியின் அருகே இருக்கும்போது எனக்கு ஓர் அகண்டு விரிந்த அமைதியான ஏரிக்கரையில் நிற்பது போல் உணர்ச்சி தோன்றும். வாரியார் அவர்கள் பக்கம் போனாலோ, 'ஹோ' வென்று கொட்டும் மலை அருவியின் எதிரே நிற்பது போன்ற பிரமை ஏற்படும். கண்ணதாசன் அவர்களின் பக்கத்தில் அமர்ந்தாலோ ஓர் ஆயிரம் 'வாட்' பல்ப் ஒளியில் நிற்பது போன்ற பிரமை ஏற்படும். அமரர் கல்கி பக்கத்தில் நின்றால் குற்றாலச் சாரலின் இனிமை தெரியும். நான் ஒரு பதிப்பாளனாக வித்திட்டவரே கல்கிதானே?

வாரியார் அவர்களிடம் விடைபெற்றுத் திரும்பும்போது மணி ஒன்று முப்பது. இனிய புத்தகங்கள் என்று வாசகர்களால் வரவேற்கப்படும் பிரசுரங்களை வழங்கும் எனக்கு இனிப்புப் பண்டங்கள் அவ்வளவாக ஒத்துக் கொள்வதில்லை. கசப்புக் காய்கறிகள் உடம்புக்கு நல்லது என்கிறார்கள். கசப்பை விழுங்கி இனிப்பைப் பிறருக்குக் கொடுக்கிறோம் என்று வேடிக்கையான எண்ணச் சுழலில் மூழ்கிக் கொண்டே சாப்பிட அமர்கிறேன்.

சாப்பிட்டவுடன் சிறிது ஓய்வு அவசியமாகிறது. மீண்டும் மூன்றரை மணிக்குத்தான் பதிப்பகம் வருகிறேன்.

இப்போது சில முக்கியமான பிரசுரங்களுக்கான புரூப்களைப் பார்க்க நிமிர்ந்து உட்காருகிறேன். அப்போதுதான் எனக்குத் திருப்தி ஏற்படும். எல்லாப் புத்தகங்களுக்கான புரூப்களையும் நானே பார்க்கிறேன் என்று சொல்வதற்கில்லை. அதற்குச் சில உதவியாளர்கள் இருக்கிறார்கள்.

ஐந்தரை மணிக்கு ஒரு கப் காப்பி வரவழைத்துச் சாப்பிட்டுவிட்டுத் தேனும் பேட்டையில் உள்ள கவிதா ஓட்டலுக்குச் செல்கிறேன், கண்ணதாசன் அவர்களைச் சந்திக்க.

ஏகாந்தமாகக் கல்யாண மண்டபத்தை அடுத்த மரத்தடியில் சாய்ந்து, அந்த மாலை வெய்யில் மேலே பட அவர் வேகமாக ஏதோ எழுதிக் கொண்டிருக்கிறார். அவர் எழுத்தில் இருக்கும் கம்பீரம் போல் அவர் அமர்ந்திருக்கும் பாணியிலே ஒருவித கம்பீரம்!

நான் அணுகுவதை உணர்ந்து தலையை நிமிர்த்துகிறார். ''ஆறாவது தொகுதி என்ன ஆச்சு?'' என்ற கேள்வி வேகமாக வருகிறது. அவருடைய கவிதைகளின் ஆறாவது தொகுதியை நான் தயாரித்துக் கொண்டிருக்கிறேன். கையோடு கொண்டு போயிருக்கும் திருத்தப் பட்ட புரூபை அவரிடம் நீட்டிவிட்டுப் பக்கத்தில் அமர்கிறேன்.

அடேயப்பா! அவர் முகத்தில்தான் எத்தனை ஆனந்தம். ''இந்தத் தொகுதியோட வெளியீட்டைப் பெரிய விழாவாகக் கொண்டாடிவிட வேண்டும்! தெரியுமா?'' என்று உற்சாகத்துடன் சொல்லிக் கொண்டே நான் கொடுத்த பக்கங்களைப் புரட்டுகிறார்.

சில சந்தர்ப்பங்களில் கவிஞர் குழந்தையாகவே மாறி விடுவார். அவருடைய புத்தகங்கள் எத்தனையோ வெளியாகி விட்டன. ஆனாலும், ஒவ்வொரு புத்தகம் வெளியாகும் போதும், தம் முயற்சி முதன் முதலாகப் புத்தகமாக வந்து பார்ப்பது போலப் பரவசமடைவார். அவருடன் பேச ஆரம்பித்தால் நேரம் போவது தெரியாது.

இன்று வேறு எந்த நிகழ்ச்சியிலும் கலந்து கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் இல்லை. அவரிடம் விடைபெற்று வீட்டுக்குக் கிளம்புகிறேன்.

சாப்பிடும்போது குடும்பத்தின் அன்றாட நிகழ்ச்சிகள் பற்றி வீட்டாருடன் அளவளாவல். இப்போதுதான் அதற்கு அவகாசம்.

பதிப்பாளனாக மாறுவதற்கு முன்பிருந்தே இரவில் படுக்கப் போகு முன், பிடித்தமான புத்தகத்தில் இருபது முப்பது பக்கங்கள் படித்துவிட்டுத்தான் தூங்குவேன். அந்த வழக்கம் இன்னும் தொடர்ந்து வருகிறது. சமீப காலமாக டேல் கார்னீயின் புத்தகங்களைப் படித்து வந்தேன். இப்போது கையில் காஞ்சி ஆசாரியாளின் சொற்பொழிவுத் தொகுப்பு. 'தெய்வத்தின் குரல்' என்ற தலைப்பில் என் பதிப்பகத்தில் தயாராகி வருகிறது. அதன் புரூப் பகுதிகளைப் படிக்கிறேன். ஞானச் சுரங்கத்துக்குள் நுழைந்து விடுகிறேன்!

அஞ்ஞான உலகுக்குத் திரும்பும்போது இரவு மணி பத்தரை. படுக்கையில் சாய்கிறேன்.

கேட்டு எழுதியவர்: **கோமதிசுவாமிநாதன்**

படம்: **உத்ரா.**





## ஆபீஸ் நுணல்

''சார்! சாயந்தரம் ஃப்ரீயா இருப்பீங்களா?.... சினிமாவுக்கு ரெண்டு டிக்கட் ரிசர்வ் பண்ணியிருக்கேன்...''

''உன் கூட சினிமாப் பார்க்கறதுக்கு நான் கொடுத்து வச்சிருக்கணுமே விமலா!...''

''உங்க கூட வரப்போறது நான் இல்லே சார், என் பாட்டி!...''

## புரட்சி செய்த பாட்டில்!

''எங்க மானேஜர் சுத்த முசுடு... எல்லார் பேரிலேயும் எரிஞ்சு விழுவார். தேன் பாட்டில்னு சொல்லிக் கோந்து பாட்டிலே அவர் கிட்டக் கொடுத்தாங்க... அவரும் அதை வாங்கிக் குடிச்சுட்டார்...''

''அடடே! அப்புறம் என்ன ஆச்சு?''

''அதிலேருந்து எல்லார் கிட்டேயும் ஒட்டுதலா இருக்கார்!''



# ஜோக் ஜாக்கிரதை!



## தப்பாமல் பிறந்தது!

''விஷயம் தெரியுமா சார்!... நம்மடைப்பிஸ்ட் நளினாவுக்குக் குழந்தை பிறந்திருக்காம்...''

''அப்படியா?... பொண்ணு பிள்ளையா?''

''ஒன் பிளஸ் ஒ ஆண் குழந்தை சார்!''

## டி-பன்!

''காலையிலே பன் வைச்சுக் கொண்டை போட்டுக்கிட்டு வந்திருந்தியே, இப்போ எங்கே காணோம்?''

''அது நிஜ பன்!... டிபன் டயத்திலே சாப்பிட்டேன்!''



## சூரப்புலி!

''புலிப்பால் வேணும்னாலும் எங்க வீட்டுக்காரர் எனக்காகக் கொண்டு வந்து கொடுப்பார்...''

''அப்படியா?''

''அவர் வேலை பார்க்கிறதே சர்க்கஸ் கம்பெனியில்தானே!''



## சக்கைப் போடு!

''மூணு வாரமச என் மனைவி என்னைத் தினமும் பிழிஞ்சு எடுத்திண்டிருக்கா சார்..''

''ஏன்? என்ன வேணுமாம்?''

''ஜூஸ் பண்ணைக் கத்துக் கொடுக்கிற ஸ்கூலிலே சேரணுமாம்!''

## கேட்(கிற) காது!

''டாக்டர்! உங்ககிட்ட காது வைத்தியம் பண்ணிண்டதுக்கு நான் எவ்வளவு கொடுக்கணும்?...''

''அஞ்சு ரூபாய்...''

''எவ்வளவு?.... இன்னொரு தடவை சொல்லுங்க?...''

''பத்து ரூபாய்....''

''முதல் தடவையே காது நன்னாக் கேட்டுது டாக்டர்... இந்தாங்க அஞ்சு ரூபாய்!''

## தலைவி(தி)!

''சார்! தப்பா நெனைச்சுக்காதீங்க...இத்தனை வருஷமா மேடையிலே 'தலைவர் அவர்களே'ன்னு கூப்பிட்டுக் கூப்பிட்டு, வீட்டிலே மனைவியையும் அப்படிக் கூப்பிடற பழக்கம் வந்துருச்சு!''






கதை:
கௌசிகன்
சித்திரம்:
ம.செல்வன்
8
சாரு இருந்த அறையின் கதவை வெளியில் தாளிட்டுக் கொண்டு போகிறார்கள்.
இந்தப் பால்கனி வழியே தப்பிச் செல்வது கஷ்டம். ஆனால் லக்ஷ்மண் கூறியது போல நான் வெளியில் போனால் இந்தக் குளிரில் விறைத்துத் தான் போவேன்.
லக்ஷ்மணின் கூட்டாளி சந்தைக் கெல்லாம் உணவுடன் வந்தான்.
இந்தாம்மா, இனிமேல் நீ இந்த காட்டுப் புறத்து வேஷத்தில் சிரமப்பட வேண்டாம். உன் வழக்கமான நாகரீக உடைகளையே அணிந்து கொள்ளலாம்.
உன்னால் ஒரு உதவி செய்ய முடியுமா?
என்ன வேணும் சொல்லு.
நானும் மாதவனும் தப்பிச் செல்ல நீ உதவினாயானால் உனக்கு ஏராளமான பணம் வாங்கித் தருவேன், என் அப்பாவிடமிருந்து...
ஹ... ஹ... ஹ! ஆனால் என் எஜமானர் எனக்கு என்ன தெரியுமா கொடுப்பார்? இஷ்க்! ஏம்மா, என் கழுத்துக்குக் கத்தியை வர வழைக்கத்தானா சொல்றியா?
இந்த ஆளிடமிருந்து உதவியை எதிர் பார்ப்பதற்கில்லை லக்ஷ்மணிடம் அடங்குகிறான். என் ஒரே நம்பிக்கை மாதவன் தான்.


கீழுள்ள அறையில் மாதவனுடன் அவர்கள்...
தம்பி, நீ மட்டும் சாருவோட அப்பா ஒளிந்து கொண்டிருக்கிற இடத்தைக் கூறிவிட்டால் உனக்கு ஒரு புதையலே காத்திருக்கு.
நம்பிக்கைத் துரோகம் செய்வது என் பழக்கமில்லை.
அவனை வழிக்குக் கொண்டு வரப் பல முறைகள் இருக்கின்றன 'பாஸ்'. அதை நான் கவனித்துக் கொள்கிறேன்.
நீ நினைப்பது போல இந்தப் பயலை இணங்க வைப்பது சுலபமல்ல. உயிர் போனாலும் உண்மையைக் கூறமாட்டான்.
இதே வேளையில்...
நல்லகாலம் அவர்கள் என் கைகால்களைக் கட்டிப் போடவில்லை. ஆனால் குளிர்தான் தாங்க முடியவில்லை. விரைவில் செயல் படவேணும்.
சாரு மாடியிலிருந்து ஜன்னல் வழியே கீழே இறங்கி ஓசைப்படாமல் மாதவனைச் சிறை வைத்திருக்கும் அறைப்பக்கம் ஊர்ந்து வருகிறாள்.
அவர்கள் கவனத்தைத் திருப்பாமல் மாதவன் என்னைக் காணும்படிச் செய்யமுடியுமானால்...
குளிரில் வெகுநேரம் ஒண்டிக் கொண்டு காத்திருந்த சாரு, மாதவனுக்குக் காவலிருந்த லக்ஷ்மணின் கூட்டாளி குறட்டை விடும் ஓசை கேட்டதும் மாதவனின் அறைக்குள் நுழைகிறாள்.
இந்தக் கத்தி என் 'ஜீன்ஸ்' பாக்கெட்டிலிருந்தது. அவர்கள் பார்வையில் படவில்லை.
மாதவனின் கைக்கட்டுக்களைத் துண்டிக்கிறாள் சாரு.
ஐயோ, உங்கள் கைகளில் எப்படி ரத்தம் கட்டிப் போயிருக்கிறது?
சாரு, நாம் இப்போது இந்தக் குளிரில் இங்கிருந்து தப்பிச் செல்லுவது ஆபத்து. நீ உன் அறைக்குப் போய் எனக்காகக் காத்திரு. தக்க சமயத்தில் நான் வருகிறேன்.
தொடரும்

# ஆளுநரின் ஆலோசகர்



தலைமைச் செயலகத்தில் வழக்கமாக முதலமைச்சர்கள் இருந்து பணியாற்றி வந்த அறையில் இன்று ஆளுநரின் ஆலோசனையாளர் திரு பி. கே. தவே கம்பீரமாக வீற்றிருக்கிறார். சீனியர் ஐ. ஏ. எஸ். அதிகாரியான திரு தவே தமக்கு ஐம்பது வயதுக்கு மேல் ஆகிவிட்டதாகக் கூறியபோது நான் நம்ப முடியாமல் திகைக்கிறேன். குறைந்த பட்சம் பத்து வயது குறைத்துத்தான் மதிப்பிடத் தோன்றுகிறது. அவ்வளவு இளமைப் பொலிவுடன் விளங்குகிறார். ஜனவரி மாதம் முதல் தேதி பிறந்தவர்களின் பட்டியலில் இவரையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். இவருக்கு இரு பிள்ளைகளும் ஒரு பெண்ணும் இருக்கின்றனர்.

''உங்கள் பெயரிலிருந்து நீங்கள் மகாராஷ்டிர மாநிலத்தைச் சேர்ந்தவராக இருப்பீர்கள் என்று எண்ணுகிறேன், சரிதானா?'' என்று திரு தவேயைக் கேட்கிறேன்.

''இல்லை; முந்நூறு வருடங்களுக்கு முன்பு எங்கள் முன்னோர் குஜராத்தில் வசித்தனர். நாங்கள் மத்தியப் பிரதேசத்துக்குக் குடிபெயர்ந்து நீண்ட நெடுங்காலமாகி விட்டதால், குஜராத்தி எங்கள் தாய்மொழி எனினும், ஹிந்திதான் நான் அதிகம் பேசுவது. ஜபல்பூரில்தான் நான் பிறந்தேன்'' என்கிறார் திரு தவே.

''நீங்கள் படித்தது எங்கே?''

''நாகபுரி பல்கலைக் கழகத்தில் 1943ல் பி. எஸ்ஸி. ஆனர்ஸ் — தாவர இயல்— படித்துத் தேர்வு பெற்றேன். அடுத்த ஆண்டு இராணுவப் படையில் சேர்ந்தேன். ஸிக்னல் பிரிவில் (Corps of Signals) மூன்றாண்டுகள் பணியாற்றி, காப்டன் பதவி வகித்து ராணுவ சேவையிலிருந்து வெளியேறினேன். அந்த வருடம் (1947) ஐ. ஏ. எஸ். பரீட்சை எழுதித் தேர்வு பெற்றேன்.

ஆனர்ஸ் தேர்வில் இவரது 'ராங்க்' பற்றிக் கேட்டதும், ''முப்பது வருடங்களுக்கு மேல் ஆகிவிட்டதே — நான் படித்து முடித்து? இப்போது அதைப் பற்றிச் சொல்லுவதில் என்ன பயன்?'' என்று இலேசாகச் சிரித்தவாறு திருப்பிக் கேட்கிறார் திரு தவே. நான் வற்புறுத்திக் கேட்ட பிறகு, கல்லூரியில் அனைத்துத் தேர்வுகளிலும் அவர் முதல் வகுப்பில் பாஸ் செய்ததையும் ஆனர்ஸ் தேர்வில் பல்கலைக் கழகத்திலேயே முதல் மாணவராகத் தேர்வு பெற்றுத் தங்கப் பதக்கம் வாங்கியதையும் அடக்கத்துடன் வெளியிடுகிறார்.

''ஐ. ஏ. எஸ். பயிற்சி முடிந்தபிறகு எங்கெல்லாம் பணியாற்றினீர்கள்?''

''ஐதராபாத்தில் 1948 முதல் 1952வரை இருந்தேன். அங்கு ரஸாக்கர்களை ஒடுக்கும் 'போலீஸ் நடவடிக்கை' எடுக்கப்பட்டதல்லவா? அவ்வமயம் நான் அங்குதான் பணியாற்றினேன். மாவட்டக் கலெக்டராகவும், சிவில் நிர்வாகியாகவும், உணவு சிவில் சப்ளை துறை இயக்குநராகவும் 'பல்வேறு பொறுப்புக்கள் வகித்தேன். பிறகு 1959 வரை மத்தியப் பிரதேசத்தில் பணியாற்றினேன். வார்தாவில் கலெக்டராக இருந்திருக்கிறேன். அடுத்த எட்டு ஆண்டுகள் மத்திய அரசின் உள்துறை அமைச்சகத்தில் பணியாற்றினேன். 1967-71 ஆண்டு காலத்தில் ஜம்மு — காஷ்மீரில் பிரதம செயலாளராக இருந்திருக்கிறேன். 1971 முதல் இந்தப் பதவிக்கு நியமனம் செய்யப்படும்வரையில் பெட்ரோலியம், இரசாயனப் பொருட்கள் அமைச்சகத்தில் செகரட்டரியாக இருந்தேன். இப்போது சென்னைக்கு வந்திருக்கிறேன்.''

''நீங்கள் வகித்த பல்வேறு பதவிகளில் மிகவும் பொறுப்பு வாய்ந்ததென எதைக் குறிப்பிடுவீர்கள்?''

''எல்லாமே பொறுப்புணர்ச்சியுடன் நிறைவேற்றப்பட வேண்டிய பணிகள்தாம். எனினும் ஐதராபாத்தில் போலீஸ் நடவடிக்கை எடுத்து முடிந்ததும், அங்கு சகஜ நிலைமை நிலவச் செய்யும் பணியும், ஜம்மு காஷ்மீரில் செகரட்டரியாக இருந்தபொழுது ஆற்றிய பணியும் குறிப்பிடத் தக்கவை. பெட்ரோலியம் துறையில் கடலுக்கடியிலிருந்து பெட்ரோலியம் எடுக்கும் திட்டத்துக்கான ஒப்பந்தங்களைச் சீராக நிறைவேற்றியதையும் குறிப்பிடலாம். எஸ்ஸோ, பர்மாஷெல் கம்பெனிகள் தனித்து இயங்கி வந்தன. அவற்றைப் பாரத எண்ணெய்க் கார்ப்பொரேஷனுடன் இணைக்கும் திட்டம் வெற்றிகரமாக நிறைவேறியதையும் குறிப்பிடலாம். உலகெங்கும் பெட்ரோலியம் பொருள்களின் விலை பன்மடங்காக உயர்ந்தது. நமது பொருளா







1. கலைக்கூடம் உருவாக்கும் ஸ்ரீமதி பத்மா வரதாச்சாரி.
2. காஞ்சிபுரம் வரதராஜ பெருமாள் தேர்.
3. ருக்மிணியைத் தேரிலேற்றிச் செல்கிறான் கண்ணன்.

# குப்பைக் கூளம் கலைக்கூடமாகிறது!

வீட்டில் உபயோகமற்ற பொருள் என்று எதுவுமே இருக்கக் கூடாது. இருந்தால் அவை கலையழகு மிக்க பொருட்களாக மாறி விடும். மாற்றுபவர் ஸ்ரீமதி பத்மா வரதாச்சாரி அவர்கள்.

ஒவ்வொரு நவராத்திரி சீஸனிலும் அவரது கைவண்ணம் அவரது இல்லத்தில் பளிச்சிடும். அவரது கைவண்ணத்தைச் சென்னை டெலிவிஷனும் பிரதிபலித்துள்ளது.

'பகவத் கீதை' அருளிய கிருஷ்ண பரமாத்மாவின் வாழ்க்கையைப் பொம்மைகளால் சித்திரித்திருந்தார் அவர்.

குதிரைக் கால் குளம்புகளுக்கு அவர் பயன்படுத்தியவை சிறு பாட்டில் கார்க்குகள். வெள்ளை நிற பால்பாயிண்ட் பேனா யானையின் தந்தமாகிறது. எந்தப் பொருளையுமே கடையில் விலை கொடுத்து அவர் வாங்கவில்லை. கணவன், மகன், மருமகள் ஆகியோர் அவருக்குப் பெரிதும் உதவியிருக்கிறார்கள்.

எப்படி?

தங்களது பழம் வேட்டி, புடவைகளைப் பொம்மை தயாரிக்கக் கொடுத்ததோடு ஸ்ரீமதி பத்மா அவர்களின் யோசனைக்கோ ஆர்வத்துக்கோ எந்தத் தடையும் சொல்லாமல், இருந்து உதவினார்கள்.

''நானே கற்றுக் கொண்டேன். எனக்குக் குரு கிடையாது; நிஜக் குதிரையைப் பார்த்து, தேரைப் பார்த்து, அதை அப்படியே மனத்தில் இருத்திக் கொண்டு, கற்பனையில் பொம்மை வடிவாகச் செய்தேன்'' என்கிறார் ஸ்ரீமதி பத்மா வரதாச்சாரி.

பேட்டி: **ஆர். எம்.**

xxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxx

தாரம் சீர்குலையாமல் எண்ணெய்ப் பிரச்னையைச் சமாளித்து வருவதும் குறிப்பிடத்தக்கதே. இவை அனைத்துமே பாரத அரசின் உத்தரவுப்படி நிறைவேற்றப்பட்ட காரியங்கள்தாம். இவற்றை வெற்றிகரமாக நிறைவேற்றியதில் நானும் ஒரு கருவியாகச் செயல்பட்டேன். அவ்வளவே'' என்று திருதவே அடக்கமாகக் கூறியபோதிலும், அமைச்சகச் செயலாளர் என்ற வகையில் அவரது பொறுப்பு எவ்வளவு மகத்தானது என்பதை ஊகிக்கலாம்.

''ஆளுநரின் ஆலோசனையாளர் என்ற வகையில் நீங்கள் இப்போது வகிக்கும் பணியும் மிக்க பொறுப்புள்ளதே. இதில், உடனடியாகக் கவனிக்கப்பட வேண்டிய பிரச்னைகள் என்று ஏதாகிலும் பட்டியல் போட்டு வைத்திருக்கிறீர்களா?'' என்று கேட்கிறேன்.

''பாரத அரசின் இருபது அம்சத் திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றுவது தான்.''

''அது நாடு முழுவதற்குமான பொதுத் திட்டமல்லவா? குறிப்பாகத் தமிழ் நாட்டுப் பிரச்னைகள் பற்றிக் கேட்கிறேன்.''

''தமிழ் நாடு சிறப்பான நிருவாகத்துக்குப் பெயர் பெற்றது. நான் பதவி ஏற்றுள்ள சூழ்நிலை உங்களுக்குத் தெரியுமே! வேட்டையில் இறங்குவது எங்கள் நோக்கமன்று. ஆனால், லஞ்சம், ஊழல் என்று பொதுமக்கள் சுட்டிக் காட்டினால், அதில் உண்மை இருக்குமானால், கடுமையான நடவடிக்கை எடுத்தே தீரவேண்டும். நிர்வாகம் சீர்ப்பட்டு, முன்போல் சிறப்பான நிலைக்கு மீண்டும் உயர வேண்டும். அதில் அசிரத்தைக்கு இடமே இல்லை'' என்கிறார் திருதவே.

பேட்டி: **''பாணன்''**




KADEUSIFS 248

# போய்ச்சேரும் இடம் இந்தியா!



**வெளிநாட்டில் வாழும் இந்திய நாட்டு மக்களுக்கும் மேலும் இந்தியாவை பூர்வீகமாகக் கொண்டு வெளிநாட்டில் வாழும் மக்களுக்கும் தங்களுடைய பணத்தை இந்தியாவில் முதலீடு செய்ய மிகச்சிறந்த வாய்ப்பு!**

உங்களுக்கு வெளிநாட்டில் உறவினரோ அல்லது நெருங்கிய நண்பரோ இருந்தால் அவருக்கு இந்த நல்ல சேதியை உடனே தெரிவியுங்கள்.

பௌண்ட் ஸ்டெர்லிங்கிலோ அல்லது அமெரிக்க டாலரிலோ ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவில் பிக்சட் டெபாஸிட் வெளிநாட்டு நாணய கணக்கு ஒன்றை கால அளவு 91 நாட்களிலிருந்து 61 மாதங்கள் வரை, $5\frac{1}{2}$ சதவிகித வட்டியிலிருந்து 10 சதவிகித வட்டி வரை இப்போது தொடங்க முடியும்

**வரி விலக்கு!**

கிடைக்கும் வட்டிக்கு வருமான வரி கிடையாது.

**அந்நிய செலாவணி விகித கஷ்டங்கள் தவிர்க்கப்பட்டன!**

அந்நிய செலாவணி விகிதங்களின் மாறுதல்களிலிருந்து பாதுகாப்பு கிடைக்கிறது. அந்நிய செலாவணி கட்டுப்பாடு நியமங்கள் எதுவுமின்றி வட்டித் தொகையுடன் வெளிநாட்டிற்கு பணத்தைத் திருப்பி அனுப்ப முடியும்.

**ஸ்டேட் பாங்கில் கணக்கு வைப்பதால் ஏற்படும் நன்மைகள்:**

எல்லாவிதமான வங்கித் தேவைகளையும் பூர்த்தி செய்யும் வகையில் இந்தியாவில் 3600க்கும் அதிகமான அலுவலகங்களும் வெளிநாட்டுக் கிளைகளும், உலகம் முழுவதும் கரஸ்பாண்டெண்டுகளும் உடைய ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா மிகப்பெரிய பாங்காகும்.

ரூபாய் நாணயத்தில் வைக்கப்படும் இப்போதைய 'நான் ரெசிடெண்ட் (சாதாரண)' கணக்கு திட்டம் தொடர்ந்து அமுலில் உள்ளது. இதன் கீழ், சேமிப்பு கணக்கு, நடப்புக் கணக்கு, ரிக்கரிங் டெபாஸிட் கணக்கு போன்ற பலவித கணக்குகளை ஸ்டேட் பாங்க் அளிக்கிறது.

இந்த விளம்பரத்தை வெட்டி, வெளிநாட்டில் வாழும் உங்களுடைய உறவினருக்கு அனுப்புங்கள். நீங்கள் விரும்பினால் முழு விவரங்களையும் உங்களுக்கு அனுப்புகிறோம். இந்த கூப்பனை பூர்த்தி செய்து எங்களுடைய வட்டத் தலைமை அலுவலகங்கள் ஏதாவது ஒன்றுக்கு தி டெவலப்மெண்ட் மானேஜர், பெர்ஸனல் & ... பாங்கிங் அனுப்புக.

வெளிநாட்டு நாணய ('நான் ரெசிடெண்ட்') கணக்குத் திட்டத்தைப் பற்றிய முழு விவரங்களை இம் முகவரிக்கு அனுப்ப வேண்டுகிறேன்

பெயர்: ______________________

தொழில்: ______________________

முகவரி: ______________________

______________________

அனுப்புபவரின் பெயர்: ______________________

______________________

**ஸ்டேட் பாங்கின் வட்டத்தலைமை அலுவலகங்கள்:**
பம்பாய், கல்கத்தா, சென்னை, புது டெல்லி, கான்பூர், அஹமதாபாத், ஹைதராபாத், பாட்னா மற்றும் போபால்.

**வெளிநாட்டு அலுவலகங்கள்.**
லண்டன், நியூ யார்க், பாரங்ஃபர்ட், பெய்ரூட், கொழும்பு, டாக்கா, மாலே.

# ஸ்டேட் பாங்க்

Chaitra-S-B-85 Tam

# உனக்காக நான்

சுஜாதாவின் வண்ணப்படம். உயிர் நண்பர்களைப் பற்றிய உயர்ந்த கதை. நட்பின் நெருக்கத்துக்குத்தான் முதல் இடம். ஆனால் படம் பார்க்கும் ரசிகர்களுக்காகக் காதல் காட்சிகளையும், கொஞ்சம் நெருக்கமாகவே (அதாவது 'செக்ஸி'யாகவே!) சேர்த்திருக்கிறார்கள்.

பணக்கார ராஜாவின் உயிர் நண்பன், ஏழை ராமு. தந்தையின் ஆலை நிர்வாகத்தை மேற்கொண்ட ராஜாவுக்குத் தொழிலாளர் யூனியன் தலைவன் தர்மலிங்கத்தினால் தலைக் குனிவு ஏற்படுகிறது. ராஜாவின் காலடியில் தர்மலிங்கத்தைப் பணிய வைக்க ராமு ஒரு திட்டம் தீட்டுகிறான். அத்திட்டம் கதையாக வளர்ந்து விபரீதமாக முடிகிறது.

சிவாஜி, பணக்கார ராஜாவுக்குப் பொருத்த மானவர் என்பதை அளவுக்கு மீறியே நிரூபிக்கிறார்! தந்தையோடு ராஜா மோதும் போது கொட்டகையே அதிர்கிறது. நண்பனோடு இணைந்திருந்த போதும், பிரிந்து நின்ற போதும் அவர் நடிப்பு தலை நிமிர்ந்து நிற்கிறது. மிதமிஞ்சியும் போய் விடுகிறது. (அதாவது ஓவர் ஆக்ஷன்.)

ஜெமினி கணேசன், ஏழை ராமு. கொஞ்சம் வயதானவராகத் தோன்றுகிறார் என்பதை ஒப்புக் கொள்ளத் தான் வேண்டும். தொழிலாளர்களின் குடியிருப்பிலிருந்து சென்று ஒவ்வொரு தடவை ராஜாவைச் சந்தித்த போதும் தடுமாற்றம் அடைந்து தன் புதிய மாறுதலை ராமு வெளிப்படுத்துகிறான். அதை ஜெமினி கணேசன் தம் நடிப்பாற்றலினால் நன்கு வெளிப்படுத்துகிறார்.

லக்ஷ்மி, ராஜாவின் காதலியாகக் கவர்ச்சி உடைகளில் வருகிறார். காதல் காட்சிகளில் நெருங்கி நடிக்க அவருக்குச் சொல்லித் தர வேண்டுமா என்ன? பார்வையினாலும், ஏக்கப் பெருமூச்சுக்களினாலுமே தம் நடிப்பாற்றலை நிலைநிறுத்திக் கொள்கிறார். ராஜா, ஆலை நிர்வாகத்தை ஏற்க வந்தபோது அவனைப் பார்த்த பார்வை ஒன்று போதும், லக்ஷ்மியைப் பாராட்ட!

'சோகத்துக்கு ஒரு நாகேஷ்' என்று தனிப் பாராட்டைப் பெறுகிறார் — நாகேஷ். ஏழைக் கவிஞனாக, குடிகாரனாக, மட்டற்ற மனிதாபிமானம் மிக்கவனாக, சமுதாயத்தில் படிந்து விட்ட மடமைகளை எள்ளி நகையாடும் தத்துவ ஞானியாக — ரசிகர்களின் ஏகோபித்த கைதொலிகளைப் பெறுகிறார். இதுகாறும் சிரிக்க வைத்த நாகேஷ் அனைவரையும் மனம் உருக வைக்கிறார். படத்தில் கதாநாயகனையும் மீறி நினைவில் நிற்பவர் அவர்தான். சபாஷ் நாகேஷ்!

மேஜர் சுந்தரராஜனை விட்டால், புலியாகப் பாயும் மகனுக்கு எதிரே சிங்கமாகக் கர்ஜிக்கும் தந்தைக்கு எங்கே போவது?

டைரக்டர் சி. வி. ராஜேந்திரன் தம் பொறுப்பைச் சரியாய்ச் செய்திருக்கிறார்.

மணிமாலாவுக்குச் சின்ன பாத்திரம்தான் என்றாலும் நினைவில் நிற்கிறார் — மது விற்கும் மங்கையாக வந்து வறுமை மிகுதியில் தன் சரீரத்தையே விற்கும் நிலைக்கு ஆளாகி விட்ட அபலையின் பாத்திரத்தைத் தத்ரூபமாக நடித்துக் காட்டியிருக்கிறார்.

இவ் வண்ணப்படத்தின் ஒளிப்பதிவு சிறப்பு அம்சம்.

ஏ. எல். நாராயணனின் வசனம் சுருக்கமாகவும், உருக்கமாகவும் அமைந்திருக்கிறது. மூலக்கதை ''பெக்கெட்'' என்ற ஆங்கிலப் படம்; அதன் ஹிந்தி ஆக்கம் ''நமக்ஹராம்''; அதன் தமிழ் வடிவம் ''உனக்காக நான்''. யாரைப் பாராட்டுவது? நீங்களே சொல்லுங்கள்!

— காந்தன்



# முகங்கள்

— சசிந்திரா —

கூட்டம் அதிகமாக இருந்த அந்த பஸ்ஸில் பிரபாகரனும் தொற்றிக் கொண்டான். தோள் வழியே தொங்கிய ஜப்பானிய யஷிகா காமிராவைப் பத்திரமாகப் பிடித்தவாறு படிகளிலேயே முகாந்திரம் அடித்துக் கொண்டிருந்த காளைகளை விலக்கியபடி உள்ளே நுழைந்து பின்னால் உள்ள ஆறு சீட்டுகளும் மூன்று ஆண்கள் சீட்டும் கூடுமிடத்தில் வசதியாக ஒதுங்கி நின்று கொண்டான்.

அவன் ஒரு ஃப்ரீலான்ஸ் ஃபோட்டோகிராபர். பிரபல வாரப் பத்திரிகைகளின் அட்டைப் படங்களை அலங்கரிக்கும் கவர்ச்சிப் படங்களில் பெரும்பாலானவை பிரபாகரனின் யாஷிகா பெற்றெடுத்தவைதான். முன்னுக்கு வந்து கொண்டிருக்கும் சினிமா நட்சத்திரங்களும், விளம்பர மாடல்களும் பிரபாகரனின் காமிராக்கண்கள் தங்கள் மீது படாதா என்று ஏங்கி நிற்பதும் உண்டு. அவன் காமிரா ராசியானது. அழகில் ஒரு மாற்றுக் குறைந்தவர்களைக் கூடத் தன் காமிராவின் மூலம் நல்ல அழகிகளாகக் காட்டும் அவன் தனித் திறமை பத்திரிகை உலகில் பிரசித்தமான ஒன்று.

இப்போதும் அவன் ஒரு 'மாடலை'த் தேடித் தான் போய்க் கொண்டிருந்தான். அடுத்த வாரம் உலக மாதர் ஆண்டை யொட்டி வெளிவர விருக்கும் மாதர் இதழின் முகப்பை அலங்கரிக்க ஓர் அழகிய முகம் அவனுக்குத் தேவை.

பத்திரிகையின் ஆசிரியர் காலையில் ஃபோனில் சொன்னது அவன் நினைவிலாடியது. ''பிரபா, கவர் பேஜ் உங்கள் முழுப் பொறுப்பு. இந்த ஸ்பெஷல் இஷ்யூவுக்கான ஃபோட்டோ ரொம்ப ஆப்டாகவும், யுனீக்காகவும் இருக்க வேண்டும். சன்மானம் இரு மடங்கு தர உத்தேசித்திருக்கிறேன். ஐ எக்ஸ்பெக்ட் நதிங் பட் தி பெஸ்ட்.''

ஒப்புக்கொண்டானே ஒழிய எந்த மாதிரியான புகைப்படம் தேவை என்று அவனால் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. அவன் தங்கை தாரா அவனை எப்பொழுதும் கேலி செய்வாள்.

''அண்ணா! வாரப் பத்திரிகைகளில் பெண்கள் போட்டோவையே போட்டு எங்களை வெறும் காட்சிப் பொருளாக்கிக் கேலியா பண்ணறே? இரு இரு. நான் ஒரு மாதர் இதழ் ஆரம்பிச்சு முதல் இதழ் அட்டையிலே ஓர் ஆண் போட்டோவைப் போடறேன்!'' தாராவை இப்பொழுது ஐடியா கேட்டான்.

''மாதர் இதழ் முகப்பிலே உங்க ஆசிரியர் ஃபோட்டோவைப் போட்டா ரொம்பப் பொருத்தமா இருக்குமே! பெண்களைக் காரியார்த்தமாகக் கவர்ச்சிப் பொருளாக்கும் ஆண் வர்க்கத்தின் ஆணவத்தை உருவகப் படுத்தினதாகும்'' என்று ஒரு போடு போட்டு விட்டு நகர்ந்தாள்.

பஸ் ஒரே இடத்தில் நின்று கொண்டிருந்தது. கண்டக்டர் இன்னமும் டிக்கெட்டு கொடுத்து முடியவில்லை போலும். உஷ்ண மூச்சையும், லாவண்டர் மணத்தையும், வியர்வை நாற்றத்தையும் சகித்துக் கொண்டிருந்தது கூட்டம்.

பயணிகளின் முகங்களைப் பார்த்தான் பிரபாகரன். ஒவ்வொரு முகமும் ஒவ்வொரு விதமாய், ஒன்றிலிருந்து ஒன்று மாறுபட்டு வித்தியாசமாய்த் தெரிந்தது. எத்தனை முகங்கள்! அத்தனையும் புதுப் படைப்பாய், வற்றாத கற்பனை வளமுடைய தெய்வக் கலைஞனின் அறிமுகமாய்...

பின் சீட்டில் ஆறு இளம் பெண்கள்—எல்லோரும் கல்லூரி மாணவிகள். காலத்தே செய்த பயிரைப் போல ஊட்டத்தில், வசந்த கால இளமையின் நாட்டத்தில், சுவை உணர்ந்து போர்த்திய ஆடைகளின் வண்ணப் பொருத்தத்தில் பொதுவானதோர் அழகுணர்வை அவர்கள் தோற்றுவித்தார்கள். பிரபாகரனின் காமிராக் கண்கள் அந்த முகங்களைக் கலை உணர்வோடு ஆராய்ந்தன.



வடிவான முகம் ஒருத்திக்கு! ஆனால் அருகில் இருந்தவளின் எடுப்பான மூக்கும், சீரான பல் வரிசையும் இவளுக்கு இல்லை. மற்றொருத்திக்குப் பலாச் சுளை உதடுகளும், பிறை நிலா நெற்றியும் சிறப்பாய்த் தெரிந்தன. அடுத்து அமர்ந்தவளுக்கோ கருநாகம் போன்ற நீண்ட கூந்தல்! மற்றவர்களுக்கு இல்லாத அம்சம் இது. கோடியில் அமர்ந்திருந்தவளுக்குக் கதுப்புக் கன்னங்கள். பிரபாகரனின் அருகே இருந்தவளுக்கோ இன்றைக்கெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம் போன்ற காந்தக் கண்கள்.

ஒரு முகம் போல் இன்னொன்று இல்லை. ஆனால் ஒவ்வொரு முகத்திலும் ஓரோர் அம்சம் சிறந்து தனித்துவம் பெற்றது. இந்தச் சிறப்பு அம்சங்களை யெல்லாம் பிரித்து எடுத்தெடுத்து ஒரு புது முகத்தை உருவாக்கினால் அந்த முகத்தின் பேரழகில் இந்த உலகம் மாய்ந்து விடாதா? அதுவே மாதர் இதழின் முகப்பை அலங்கரிக்கப் போதாதா?

கற்பனையை அவன் கத்தரித்தான், பஸ் ஒரு குலுக்கலுடன் புறப்பட்டதால்.

அடுத்த ஸ்டாப்பிங்கில் நின்று புறப்பட்ட பஸ்ஸில் ஓர் எண்பது வயதுக் கிழவி ஏறிக் கொண்டாள். அந்தச் சொல்லி முடியாத கூட்டத்தின் நெரிசலில் கிழவியால் நிற்க முடியவில்லை. தள்ளாத பருவம் வேறு. வாழ்க்கைப் பாதையில் நெடுந் தொலைவு நடந்த களைப்பில் கால்கள் வலிமை இழந்து விட்டன. மெள்ளத் தடுமாறிப் பிரபாகரனின் பக்கத்தில் நின்று கொண்டாள். ஓரத்துக் கம்பியைப் பிடித்துக் கொண்டு சற்றே நிதானித்தாள்.



பின்னால் உட்கார்ந்திருந்த இளம் அழகிகளில் ஒருவராவது எழுந்து அந்தக் கிழவிக்கு இடம் தரவில்லை. ஒருத்திக்குக்கூடவா மனம் இளகவில்லை? பிரபாகரனுக்கு வருத்தம் மட்டுமல்ல, முதுமைக்கு மரியாதை செய்யாத இளமையின் மீது பெருங் கோபமே வந்தது.

'சடன் பிரேக்'!- சாலை விதிகளை மீறிக் குறுக்கே வந்து விட்ட ஒரு பாதசாரியைக் காப்பாற்ற டிரைவர் எடுத்த திடீர் நடவடிக்கையில் வலுவான இருபது வயசு இளசுகளே நிலைகுலைந்து சாய்ந்தபோது, எண்பது வயது பழுப்பு எம்மாத்திரம்! ஆடிப்போய், பின் சீட்டு அழகிகளில் ஒருத்தியின் மடியில் விழுந்து விட்டாள். இதை எதிர்பார்த்த பிரபாகரன் அந்தப் பெண்ணின் சீற்றத்தைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

''சீ, தரித்திரம். நீ மேலே விழுந்ததால் டிரெஸ்ஸெல்லாம் கலைஞ்சு போச்சு. ஒழுங்கா நில்லு. பீக் அவர்லே வந்து உயிரை வாங்கறியே!''

கிழவியைப் பிடித்துத் தள்ளாத குறையாக விலக்கினாள். பிரபாகரன் கிழவியைப் பிடித்து மீண்டும் நிற்க வைத்தான். மடிப்புக் கலையாத 'பாம்பே டையிங்' சேலையைச் சரி செய்து கொண்டே கோபத்தால் 'பிளம்' பழம் போல் சிவந்த விழிகளில் வெறுப்பைத் தேக்கிக் கிழவியை ஒரு பார்வை பார்த்தாள். பாவம், கிழவி! பஸ்ஸின் ஆட்டத்தோடு இந்த ஆட்டம் வேறு அவளை வெகுவாகப் பாதித்து விட்டது.

''என் மேலே தப்புத்தான். மன்னிச்சுக்கோ, அம்மா. பிரேக் போடுவாங்கன்னு நினைக்கலே. நிக்க முடியாம விழுந்திட்டேன்'' என்று கிழவி கூனினாள். அப்போதும் அவள் கோபம் தணிந்ததாய்த் தெரியவில்லை. மற்றப் பெண்களின் முகங்களும் வெறுப்பையே விதைத்தன.

அடுத்த ஸ்டாப்பில் ஓர் இடம் காலியாகிப் பிரபாகரன் உட்கார இடம் கிடைத்தது. அவன் உட்கார





# மர்மக் கதை முடிவு

கவரில் இரு விழிகள் நாவல் தொடங்குவதற்குமுன் பின்வருமாறு அறிவிப்பு செய்திருந்தோம் : ''ரேகா சந்திரநாத் எம்மிடம் எழுதித் தந்திருக்கும் முடிவினை ஊகித்து எழுதுபவருக்கு ரூ. 500 பரிசு வழங்கப்படும்.''

ரேகா சந்திரநாத் எம்மிடம் எழுதித் தந்திருந்த முடிவு பின்வருமாறு :

'' யாருமில்லாதபோது கார்த்திக், அதாவது கோவிந்து டாக்டரை ஊசி மருந்து விஷத்தால் கொன்று, டாக்டரின் உடலை எரித்துவிடத் தீர்மானிக்கிறான். ஆனால், உடலை மருத்துவ ஆராய்ச்சிக்குக் 'கொடுக்கும்படி டாக்டர் உயில் எழுதி வைத்துவிடுவதால் அப்படி செய்ய முடியாமல் போகிறது. அவன் சிறைப்படுகிறான்.

'' விமலா கடத்தல்காரர்களிடம் சிக்கிக் கெடுக்கப்பட்டுக் கடலில் குதித்துத் தற்கொலை செய்து கொள்கிறாள்.''

இதில் முதல் ஓர் அம்சத்தை மட்டும் ஏராளமானவர்கள் எழுதிவிட்டார்கள். அதாவது, ''கார்த்திக் என்ற கோவிந்து டாக்டரை ஊசி மருந்து விஷத்தால் கொல்ல முற்படுகிறான்'' என்பதை. இதில் சிரமம் ஒன்றும் இல்லை. ஏனெனில் முடிவு தேதிக்கு முன்பாகவே இந்த விஷயம் கதைப் பகுதியில் இடம் பெற்றுவிட்டது.

இதற்கு அடுத்தாற்போல் நிகழ்கிற திருப்பங்களை யாராலுமே ஊகிக்க முடியவில்லை.

என்றாலும் யாருக்குமே பரிசு இல்லை என்பதைவிட அந்தப் பரிசுத் தொகையுடன் மேலும் ரூ. 100 சேர்த்து நான்கு சிறந்த மர்மச் சிறுகதைகளுக்கு வழங்குவதெனத் தீர்மானித்துள்ளோம்.

- முதல் பரிசு — ரூ. 250
- இரண்டாவது பரிசு — ரூ. 150
- மூன்றாவது பரிசு: இரு கதைகளுக்கு தலா ரூ. 100 வீதம் — ரூ. 200

இந்த மர்மச் சிறுகதைப் போட்டியில் அறிமுக எழுத்தாளர்கள் மட்டுமே கலந்து கொள்ளலாம். அதாவது போட்டிக்குக் கதையை அனுப்பும்போது இவர்களது எழுத்து அச்சில் வந்திருக்கக் கூடாது. இதற்கான உறுதிமொழியுடன் தழுவலோ மொழி பெயர்ப்போ அல்ல என்பதற்கான உறுதிமொழியையும் சிறுகதையுடன் இணைக்க வேண்டும்.

முடிவு தேதி: ஏப்ரல் 30.

பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறத் தபால் தலைகள் இணைக்க வேண்டும். கடிதப் போக்குவரத்து கிடையாது. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. ஆசிரியர், கல்கி, சென்னை – 600031.

---

வில்லை. கிழவியை உட்கார வைத்தான். ''நீ நல்லா இருப்பே'' என்று வாழ்த்தினாள். பிரபாகரனை நன்றி கலந்த கனிவோடு பார்த்தாள். பிறகு பெண்கள் சீட்டில் அமர்ந்திருந்தவர்களை ஒருதரம் பார்த்துக் கொண்டாள் அவள்! என்ன நினைத்துக் கொண்டாளோ?

பிரபாகரன் மீண்டும் அந்த ஆறு அழகிகளின் முகங்களை ஒரு தரம் ஊன்றிப் பார்த்தான். முதலில் பார்த்தபோது சிறப்பான அம்சங்களாகத் தோன்றியவை எவையுமே இப்போது அவன் கண்களில் படவில்லை. சற்று முன் அழகுச் சிலைகள் இருந்த அதே இடத்தில் இப்போது ஆறு கோரமான முகங்கள் தென்பட்டன. அந்த முகங்களில் வெறுப்பும், கர்வமும் அகங்காரமுமே மண்டிக் கிடந்தன.

சே, இந்த முகங்களையா அவன் அழகு முகங்களாக நினைத்துப் பாராட்டினான்!

அவன் குனிந்து அந்த எண்பது வயதுக் கிழவியின் முகத்தை ஆழ்ந்து பார்த்தான். எத்தனை சுருக்கங்கள் அந்த முகத்தில்! உலர்ந்த கன்னங்கள், பார்வை மங்கிய கண்கள், வெளுத்த தலைமயிர். இவையோடு மனிதாபிமானம், கனிவு, அனுபவம், அன்பு, பொறுமை ஒருங்கே குடிகொண்ட இனிய முகம்.

எப்போதோ, 'ஃபோட்டோகிராபி' பத்திரிகையில் படித்த கவிதையின் சில வரிகள் பிரபாகரனின் நினைவில் நெளிகின்றன.

''எனது முகத்தில் எண்பது வருட அனுபவங்கள்
எனது அனுபவங்களே முகத்திலுள்ள சுருக்கங்கள்
இந்தச் சுருக்கங்களுக்காக என் வாழ்வையே நான் தந்திருக்கிறேன்.
தயவுசெய்து அவற்றைக் கெடுத்துவிடாதீர்கள்.
ஏனெனில் அவையே எனது அழகின் இருப்பிடம்.

இடீரென்று ஒரு பிரகாசம் பிரபாகரனின் நெஞ்சில்! அவன் தேடிக் கொண்டிருக்கும் கனிந்த முகம் இந்த முகமல்லவா? அந்த முகத்தின் ஒவ்வொரு சுருக்கமும் ஓர் அழகுக் கவிதையாயிற்றே! காலம் எழுதிய காவியமாயிற்றே!

தஞ்சாவூர் பர்மனெண்ட் பாங்க்
அளிக்கும்

# முத்து விழா ஆண்டு

## பரிசுப் பத்திர திட்டம்

நீங்கள் முதலீடு செய்வது
ரூ 25/- மட்டுமே
இந்த முதலீட்டை 10 ஆண்டுகளுக்கு
பிறகு ரூ 50/- ஆக திரும்பப் பெறலாம்
இது தவிர
ஒவ்வொரு மாதமும் ரூ 33,000/- வரை
120 மாதங்களுக்கு
பரிசுகள் வழங்குகிறோம்
உங்கள் முதலீட்டை போல் 400 மடங்கு
பரிசுகள் பெற 120 அரும் பெரும் வாய்புகள்

மாதா மாதம் வழங்கப்படும் பரிசுகள் :

| | |
|---|---|
| முதல் பரிசு. | ரூ 10,000 |
| 2ம் பரிசு. | ரூ 5,000 |
| 3ம் பரிசு. | ரூ 3,000 |
| 4ம் பரிசு. | ரூ 100/- வீதம் 50 பரிசுகள் |
| 5ம் பரிசு. | ரூ 50/- வீதம் 200 பரிசுகள் |

இதர விபரங்களுக்கு தமிழகமெங்குமுள்ள
எங்கள் 84 கிளைகளில் ஏதேனும் ஒன்றுடன் தொடர்பு கொள்ளவும்.

THE TANJORE PERMANENT BANK LTD. · ESTD. 1901

தஞ்சாவூர் பர்மனெண்ட்
பாங்க் லிமிடெட்.,
பதிவு அலுவலகம் : தஞ்சாவூர் - 613 001

R. சொக்கப்பா — காரியதரிசி.
B. K. மாதவன், — சேர்மன்.

சக்தி - 314

# பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தி சஞ்சீவி

## குழந்தைகளின்

## ஈரல், குலைக்கட்டிகளுக்கு.

### எமது வைத்தியரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விபரம்:

| ஊர் | தேதி | நேரம் | தங்கும் இடம் |
|---|---|---|---|
| தாராபுரம் | 2 | காலை 9-00 -- 10-00 | சாந்தா கிளினிக், [illegible] ரோடு. |
| பழனி | 2 | காலை 11-00 -- 12-00 | ஜெயா மெடிகல் ஹால். |
| உடுமலைப்பேட்டை | 2 | மாலை 3-00 -- 4-00 | ராஜேந்திரா அண்டு கோ., கடை வீதி. |
| பொள்ளாச்சி | 2 | மாலை 5-00 -- 6-00 | தி எம்பயர் பார்மஸி. |
| கோயமுத்தூர் | 3 | காலை 9-11 | சீதாராம் லாட்ஜ், ஸ்டேட் பாங்க் ரோடு, ரெயில்வே ஸ்டேஷன் எதிர்புறம். |
| ,, | 3 | மாலை 2-4 | |
| மேட்டுப்பாளையம் | 3 | மாலை 5-00 -- 6-00 | தி மேட்டுப் பாளையம் மெடிகல் ஸ்டோர்ஸ். |
| சத்தியமங்கலம் | 4 | காலை 8-00 -- 9-00 | C. R. K. மெடிகல்ஸ், கடை வீதி. [[illegible] ரோடு |
| கோபி | 4 | காலை 10-00 -- 11-00 | ஸ்ரீனிவாசா டைப்ரைட்டிங் இன்ஸ்டிடியூட், 56. |
| பவானி | 4 | மாலை 2-00 -- 3-00 | M. L. செட்டியார் அண்டு சன்ஸ், கடை வீதி. |
| மேட்டூர் அணை | 4 | மாலை 4-30 -- 5-30 | ஸ்ரீ ராமன் லாட்ஜ். |
| ஈரோடு | 5 | காலை 9-00 -- 11-00 | ஸ்ரீ கிருஷ்ணா டாக்கீஸ். |
| திருப்பூர் | 5 | மாலை 4-00 -- 5-30 | P. R. மணியம் ஸ்டோர்ஸ், பல்லடம் ரோடு. |
| திருச்சி | 6 | காலை 11-00 to மாலை 6-00 | திருச்சி ஆயுர்வேதிக் யூனியன், சின்னக் கடைத் தெரு. |
| தஞ்சாவூர் | 7 | காலை 7-00 -- 9-00 | Dr. S. வெங்கடராமன் வைத்தியசாலை, சகாநாயக்கன் தெரு. |
| கும்பகோணம் | 7, 17, 27 | காலை 10-00 to மாலை 5-00 | ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை கிளை, 94. டவுன் ஹைஸ்கூல் ரோடு. |
| சீர்காழி | 8 | காலை 7-00 -- 8-00 | பிரம்ம வித்யா ஆயுர்வேத வைத்தியசாலை, தாடாளன் சன்னதி. |
| மாயூரம் | 8 | காலை 9-30 -- 12-00 | ஸ்ரீ வெங்கடேசா மெடிகல் ஹால், பட்டமங்கலத் தெரு. |
| நாகப்பட்டினம் | 8 | மாலை 5-00 -- 6-00 | நாகை மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| திருவாரூர் | 9 | காலை 7-30 -- 9-00 | தன்வந்திரி மெடிகல் ஹால், 21, [illegible]. |
| விஜயபுரம் | 9 | காலை 10-00 -- 11-00 | சகுந்தலா பார்மஸி, நாகை ரோடு. |
| திருத்துறைப்பூண்டி | 9 | மாலை 2-00 -- 3-30 | ஸ்ரீ T. V. சந்திரசேகரம் பிள்ளை, கடை வீதி. |
| பட்டுக்கோட்டை | 9 | மாலை 4-30 -- 6-30 | கோபால் விலாஸ், பெரிய தெரு. |
| புதுக்கோட்டை | 10 | காலை 8-00 -- 10-00 | திரு லக்ஷ்மி டிஸ்பென்சரி, கீழ ராஜவீதி. |
| தேவகோட்டை | 10 | மாலை 2-30 -- 3-30 | ஸ்ரீ சோமசுந்தரம் மெடிகல் ஸ்டோர்ஸ், [illegible] ரோடு. |
| காரைக்குடி | 10 | மாலை 4-30 -- 6-00 | திரு கௌரி லாட்ஜ், மகர் நோன்பு அக்ரஹாரம். |
| சிவகங்கை | 11 | காலை 8-30 -- 10-00 | கௌரி அண்டு கோ., கடை வீதி. |
| மதுரை | 11 | காலை 11-00-12-30 | T. N. சொக்கலிங்கம் பிள்ளை சன்ஸ், வடக்கு சித்திரை வீதி. |
| ,, | 11 | மாலை 3-00- 6-00 | |

குறிப்பு: பிரதி இங்கிலீஷ் மாதம் 10, 25 தேதிகளில் மாலை 4 முதல் 6 மணி வரை எமது வைத்தியர் மயூர வைத்தியசாலை B-11, 1வது கிராஸ், தில்லை நகர், திருச்சி என்ற விலாசத்தில் முகாம் செய்கிறார்.

## ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை, கரூர் (போன்: 87)

திருச்சி ஜில்லா



# எண்ணாமல் வழங்குவீர் அண்ணாமலைப் பணிக்கு!

அரி அயன் காணா அறிவுச் சோதியாய் சிவபெருமான் நின்ற அரிய ஸ்தலம். பஞ்சபூத க்ஷேத்திரங்களில் தேயுப் பகுதியாகத் தேயாப் புகழுடன் விளங்குவது. காஞ்சியின் ஈசனைப் பூசனை செய்த அம்பிகை, அத்தவப் பலனைச் சிவத்தை மணந்த சீர் ஆரும் க்ஷேத்திரம். பிரபஞ்சத்தின் மைய ஸ்தானம். அப்பரும் சம்பந்தரும் நாவாரத் தேவாரம் பாடிய நன்னகரம். மணிவாசகரின் திருவெம்பாவை உதித்தது இங்குதான். முருக குருவிடம் அருணகிரி அரும்பொருள் பெற்ற இடம்.



**மரியாதை தந்த பெரியவர்!**

ஒரு சமயம் காங்கிரஸ் ராஷ்டிரபதியாகத் தேசபந்து சித்தரஞ்சன தாஸ் இருந்தார்.

சட்டசபைப் பிரவேசம் வேண்டும் என்பது தாஸ் அவர்களின் கட்சி. அது வேண்டாம் என்பது ராஜாஜி அவர்களின் கட்சி. காங்கிரஸ் விஷயாலோசனைக் கமிட்டியில் ராஜாஜி வெகு தீவிரமாய்ப் பேசிக் கொண்டிருந்தார். அப்போது "முன்னால் வந்து பேசுங்கள்; பேசுவது காதில் விழவில்லை" என்று யாரோ ஒருவர் குரல் கொடுத்தார்.

"நான் முன்னால் வந்தால் ராஷ்டிரபதி அவர்களுக்கு என் முதுகைக் காட்டிக்கொண்டு நிற்க நேரிடும். அவ்விதம் நான் செய்ய மாட்டேன்" என்று பதில் கூறினார் ராஜாஜி.

அதே ராஷ்டிரபதியின் கருத்தைத்தான் ராஜாஜி தாக்கிப் பேசிக் கொண்டிருந்தபோதிலும் அவருக்குத் தம் முதுகைக் காட்டிக் கொண்டு நின்று பேசுவது மரியாதையல்ல என்று கூறியது அனைவருக்கும் மிகுந்த ஆச்சரியத்தை அளித்தது.

- "சுவாரசிய விருந்து" என்ற புத்தகத்திலிருந்து -ஆர். வேங்கட்ராமன்

கௌதம முனிவரில் தொடங்கி, சித்த யோகியர் பலரும், இடைக்காடரும், பட்டினத்தாரும் சமீப காலத்தில் ரமண பகவான் வரை மாமேருக்களாக வாழ்ந்த பெரியோர் சிறப்பாக உவந்த திவ்வியத் தலம். "எல்லையில் அருணகிரி தனை நினைக்க எய்தலாம் முத்தி" என்றும் "ஸ்மரணாத் அருணாசலம்" என்றும் போற்றப்படும் மோக்ஷபுரி.

ஆகா! கருணாசலமாம் அருணாசலர் கோயிலே கோயில்! எத்தனை வானோங்கு கோபுரங்கள்! எத்தனை விஸ்தாரப் பிராகாரங்கள்! எத்தனை மணி மண்டபங்கள்! எத்தனை எத்தனை எழில் கொள் திவ்விய வடிவங்கள்! அருணாசலேச்வரர், அன்னை அபீத குசாம்பிகை, நடராஜப் பெருமான், சிந்தூர வண்ண விநாயகர், கம்பத்திளைய கந்தஸ்வாமி ஆகியவர்களின் நித்திய சாந்நித்தியமோ அடியார் அன்றன்றும் அநுபவிப்பதாகும். வல்லாள மகாராஜன் காலத்திலிருந்து வரலாற்றுப் பேரரசர் பலர் வழியாக, சமீப கால நகரத்தார் முதலிய வள்ளல்கள் வரையிலுமாக மேலும் மேலும் புது வளர்ச்சி கொண்டு, நம் கலைத் திறனுக்கும் இறைவனின் அருள் திறனுக்கும் அளப்பரிய வளப்பமிகு கருவூலமாகத் திகழும் மகா மகா ஆலயம்தான்!

இப்படிப்பட்ட பிரும்மாண்டமான கோயிலுக்குத் திருப்பணி செய்து, குடமுழுக்குப் பெருவிழா நடத்துவதெனில், இக்கால நிலையில் லக்ஷ லக்ஷமாக நிதியம் வேண்டும்தானே? நாற்பது லக்ஷம் ரூபாய் தேவைப்பட்ட தேவமாப் பணியைப் பேரன்பர் சிலர் முன்வந்து மேற்கொண்டனர். இறையருள் கூட்டுவிக்க இவர்களது இடையறா முயற்சியில் பெரும் பங்கு நிரண்டு, திருப்பணியும் அமோகமாக ஈடேறிக்கொண்டு வருகிறது.

வருகிற பங்குனி 22ந் தேதி (ஏப்ரில் 4ந் தேதி), கார்த்திகைத் தீபத்துக்குப் பெயர் போன தலம் என்பதற்கேற்ப கிருத்திகா நட்சத்திரம் கூடிய நற்பெரு நாளன்று, மகா கும்பாபிஷேகம் நடக்கவிருக்கிறது.

அதற்குள் அதாவது சுமார் ஒரு மாதத்துக்குள் பத்து லட்சம் ரூபாய் திரண்டாக வேண்டியிருக்கிறது. எப்படித் திரளுமோ என்று திருப்பணிக் குழுவினர் திலேயும் கவலைப்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது ஆஸ்திகப் பெருமக்களின் கடமை.

எண்ணினாலே முக்தி தரும் அண்ணாமலை அண்ணலின் பணிக்குப் பணத்தை எண்ணாமலே அள்ளி அள்ளித் தந்து, அநுக்கிரக வெள்ளத்தைப் பெறுவோமாக. பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: ஏ. கே. ஏ. ஸிடி. எஸ். சிதம்பரம் செட்டியார், கௌரவப் பொருளாளர், அருள்மிகு அண்ணாமலையார் திருக்கோயில் திருப்பணிக் குழு. 32, ஹாடோஸ் சாலை, சென்னை - 6.

## வளம் தரு வீதியிலே...

# ஏற்றத் தாழ்வற்ற சமுதாயம் அமைப்போம்

இன்று வருமான வரி விலக்குக்கான உச்சவரம்பு ரு. 8000-க்கு உயர்த்தப்பட்டுள்ளது. (இதுவரை இருந்த வரம்பு ரு. 6000 ஆகும்). இதனால் 7 லட்சம் பேர் பயனடைந்துள்ளனர். கடந்த ஆண்டு புதிதாக 1.33 லட்சம் பேர் வருமான வரி செலுத்தும் எல்லைக்குள் கொண்டுவரப்பட்டு நோட்டீஸ் கொடுக்கப்பட்டுள்ளனர்.

சேமிப்புக்கு பல வகையிலும் ஊக்கம் கொடுக்கப்படுகிறது. (ரு. 4000 வரை சேமிப்புக்கு வரி ஏதுமில்லை) வரி ஏய்ப்போருக்கும் கடுந் தண்டனை காத்திருக்கிறது.



**நெஞ்சில் உரமும்
செயலில் திறனும்
உறுதுணை நிற்கும்**

davp 75/494

# மலைக்க வைத்த மாலை

“ஓ, மை காட்!”

மலைபோன்ற மாலையைக் கண்டதும் பிரமித்துப் போன பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தியின் வாயிலிருந்து எழுந்த சொற்றொடர் இது! சோமங்கலத்தில் நடைபெற்ற ஊரகச் சீரமைப்பு விழாவிலே அவருக்குப் போடப்பட்ட அந்த மாலை அவர் மீது சுமந்திருக்கும் பொறுப்புச் சுமையை நாசூக்காக நினைவூட்டியது. அவரை அறிந்தோ அறியாமலோ இந்திய இரத்தத்தில் ஊறிய இறைமை அவருக்கு நினைவு வந்தது. இந்தியாவை இணைத்து ஒருமைப்பாட்டுக்கே வழிகோலியிருப்பது இறை உணர்வுதானே?

ஏழு கிராமங்களை இணைத்து இருபது அம்சத் திட்டத்தின் சில அம்சங்களுக்குச் செயல் வடிவம் தரும் சந்தர்ப்பத்தில் பேசிய அவர், “குடும்பங்கள் ஒரு கட்டுப்பாட்டுக்குள் அடங்காமல் வளர்ந்து கொண்டே போனால், இன்னும் சில ஆண்டுகளில் சமுதாயம் எப்படித் தலைகீழாகி விடும் என்பதை எடுத்துரைத்து, “பொறுமையைப் பூஷணமாக உடைய பெண்களைக் காட்டிலும் ஆண்களே இதில் அதிகம் கவனம் செலுத்த வேண்டியவர்கள்” என்று கூறிச் சிரிப்புக்கிடையே சிந்திக்க வைத்து விட்டார்!

நந் தமிழ்நாட்டுச் செயல்வீரர் காமராஜ் நினைவகத் திறப்பு விழா!

கணீரென்ற குரலில் மனோன்மணியம் தந்த தமிழ் வாழ்த்துப்பா ஒலிக்கிறது!

செவிமடுப்பவர் மெய் மறக்கின்றனர்.

இடையிலே வேண்டாமென்று ஒதுக்கி விட்ட ஒரு வரி இசை தவறி ஒலிக்கிறது!

ஆரியம் போல் உலக வழக்கு அழிந்து ஒழிந்து சிதையாமல் —

பொருந்தா அந்த வரியைக் கேட்டுப் பொது மக்களே முகம் சுளிக்கின்றனர்.

நினைவகத்தைத் திறக்க வந்த பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி பொது மக்களின் இந்த முகச் சுளிப்புக்குக் காரணத்தை வினவி அறிகிறார்! பாரதம் ஒன்று என்பதை அழகாக எடுத்துக் கூறிப் பெருந் தலைவர் காமராஜ் வழிகாட்டியாக நின்றதை விளக்குகிறார்.

புதுக் கல்லூரியின் அலுவலகக் கட்டடத் திறப்பு விழா! சிறுபான்மையினர் என்று கூறிக் கொண்டு இஸ்லாமானவர் நடத்தும் அரும் பெரும் செயலைப் புகழ்கிறார். வருங்கால பாரதம் இளைஞர்களின் கையிலே பரிமளிக்க வேண்டும் என்பதற்கும் அறிவுரை வழங்கி ஆசி கூறுகிறார்.

அந்தக் காலத்திலே அரசர்கள் செல்லும் இடங்கள் எல்லாம் விழாக் கோலம் பூணும் என்பார்கள்! அந்த மரபு அமைச்சர் அரசு புரியும் காலத்திலும் தொடர்ந்து நிகழ்கிறது. பிரதமர் விஜயத்தின் போதும் இப்படித்தான் சென்னை நகரம் பொலிவுற்றது. அது இன்னும் பரிமளிக்க ஒரு யோசனை. போன பாதையிலேயே போகாமல், ஒவ்வொரு விஜயத்தின் போதும் வெவ்வேறு சாலைகள் வழியே போனால் அந்த இடங்களும் செப்பனிடப்பட்டு எழில் கூட்டுமே!

சோமங்கலத்திலே, விழாவின் முடிவிலே தேசிய வாழ்த்து பாடப் பெற்றது! அதில் நெருடலைக் கண்டு பிரதமர் முகம் சுளித்ததை காமிரா ‘கிளிக்’ செய்ததோ, என்னவோ? பார்த்தவர்களெல்லாம் மனத்தில் படம் பிடித்துக் கொண்டனர்.

தேசிய கீதம் முடிந்ததும் அவர் மறுபடியும் ஒலிபெருக்கிக்கு வந்து கூறினார்: “தேசிய கீதத்தை எல்லோரும் கசடறக் கற்று இசையோடு பாட வேண்டும்; இணைந்து பாட வேண்டும். நாம் நாட்டுக்குச் செய்யும் சிறந்த பணிகளில் இதுவும் ஒன்றாகும்.”

இரு காங்கிரஸ்களையும் இணைக்க வந்த பாரதப் பிரதமர் இந்தியாவின் ஒருமைப்பாட்டில் அதைவிடக் குறியாயிருக்கிறார் என்பதற்கு இதைவிட வேறு என்ன சான்று வேண்டும்?

—ரா. வீ.

**பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி காமராஜ் நினைவகத்தைத் திறந்து வைக்கிறார்.**





உயரம், உயரத்துக்கேற்ற வாளிப்பான உடல், இறுக்கமான பாண்ட். ஹிப்பிகள் போன்ற தலைமயிர். பூப்போட்ட துணியில் புஷ் ஷர்ட் — இப்படி ஓர் அலங்காரத்துடன் உள்ளே நுழைந்த அந்தப் புதியவன் ரூபாவையே வைத்த கண் வாங்காமல் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''அட, ஜக்கியா?'' க்ஷமா அசுவாரசியமாக வந்தவனை வரவேற்றாள்.

''ஹாய், சசி ஆண்டி! இவள்தான் நீ சொன்ன கவர்னெஸா? எழில் மிகு பூங்கொடியாகத் தோன்றுகிறாளே! பேஷ், பேஷ்!'' க்ஷமாவின் பேச்சைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் ரூபாவின் அழகை ரசித்தான் ஜக்கி.

''ஜக்கி!'' க்ஷமா அதட்டாத தோஷம்தான்: ''நிதானித்துப் பேசு! ஒரு பெண்

23

# இன்பத்

குல்ஷன் நந்தா

ணைப் பார்த்து இப்படியெல்லாம் பேசுவது நல்லதல்ல!''

''பெண்ணைப் பார்த்துப் பேசக்கூடாது என்றால் பின்னே யாரைப் பார்த்துப் பேசுவதாம், சசி ஆண்டி?'' ஜக்கியும் விடவில்லை. ஆனால் க்ஷமா முறைத்துப் பார்க்கவே, ''சரி விடுங்கள்! பேசுவதற்கு இந்த ஒரு விஷயம் மட்டும்தானா? இன்னும் எத்தனையோ விஷயங்கள் இருக்கின்றன. ஆனால் நேரம்தான் இல்லை. இந்தாருங்கள் டிக்கெட்!'' என்று பேச்சை மாற்றி விமானப் பயணத்துக்கான சீட்டைச் க்ஷமாவின் கையில் கொடுத்தான். நாளைச் சாயந்திர 'ஃப்ளைட்'டுக்கானது. விமானம் காஷ்மீரிலிருந்து வருகிறது. தில்லிக்குப் போகிறது!'' என்று முடித்தான்.

''ஆனால் லண்டன் 'ஃப்ளைட்' நாளை நீக்கிக் காலையில் அல்லவா?'' க்ஷமா டிக்கெட்டை வாங்கிப் புரட்டிப் பார்த்தவாறே வியப்புடன் கேட்டாள்.

''ஆமாம், அத்தை! ஆனால் காலை 'ஃப்ளைட்' கொஞ்சம் 'ரிஸ்கி'. சிறிது தாமதித்தாலும் லண்டன் விமானம் தவறிவிடும். அதனால் நாம் முன்னெச்சரிக்கையாக இருந்துவிடுவோமே!'' ஜக்கி க்ஷமாவிடம் பேசிக்கொண்டிருந்தாலும் பார்வையை ரூபாவின் மீது படர விட்டிருந்தான். அவன் விழிகளில் ஆசை ஒளி அலைபாய்ந்து கொண்டிருந்தது.

க்ஷமாவுக்கு ஜக்கியின் இந்தச் செயல் பிடிக்கவில்லை. ஆனால் அவனைக் கடிந்து கொள்வது எப்படி என்பதுதான் விளங்க

வில்லை. எனவே, அவள் ரூபாவை ஏதோ வேலையாக உள்ளே அனுப்பி வைத்தாள்.

ஜக்கி பெருமூச்செறிந்தான். அவனாலும் தான் அதை எப்படி எதிர்க்க முடியும்? அலுத்துச் சலித்த குரலில், ''சரி, அத்தை! கொஞ்சம் தண்ணீர் குடிக்கக் கொடேன்!'' என்றான்.

இதற்காகவே காத்துக் கொண்டிருந்தவன் போல், ''இதோ கொண்டு வருகிறேன், எசமான்!'' என்று ஹர்நாம் உள்ளிருந்து குரல் கொடுத்தான். அடுத்த சில நொடிகளில் ஒரு டம்ளருக்கு இரண்டு டம்ளராக நீரை எடுத்துக் கொண்டு வந்தான். ''இங்கே உங்கள் வண்டிச் சத்தம் கேட்டது. அங்கே நான் நீர் பிடிக்க ஆரம்பித்து விட்டேன். உங்களுக்குத் தாகம் கொஞ்சம் அதிகம் என்பது எனக்குத் தெரியும்!'' என்றான்.

''வழியாதே!'' ஜக்கி ஓர் அதட்டல் போட்டு ஹர்நாமை அடக்கினான். அப்புறம் ஒரே மூச்சில் டம்ளர் நீர் முழுவதையும் அருந்தினான். அவன் வெற்று டம்ளரை டிரேயில் வைக்கவும், ஹர்நாம் இன்னொரு

# தென்றல்

தமிழாக்கம்: ரா. வீழிநாதன்



டம்ளர் நீரை நீட்டவும் சரியாக இருந்தது. ஜக்கிக்கு வந்த ஆத்திரத்தில், ''போதும் போ!'' என்று கத்தினான்.

தண்ணீர் டம்ளருடன் போகத் திரும்பிய ஹர்நாம் அவன் காதுபடவே முணுமுணுத்தான்: ''இன்றைக்கு எசமானுக்குத் தாகம் எடுக்காதது வேடிக்கையாக இருக்கிறதே!''

''யாருக்குத் தாகம் எடுக்கவில்லை, ஹர்நாம்?'' ரூபா மெல்லிய குரலில் கேட்டாள்.

ஹர்நாம் சமையல் அறைக்குப் போய்க் கொண்டிருந்தவன் நின்றான்; லவனுக்கும் குசனுக்கும் ரூபா சிற்றுண்டி அளித்துக்கொண்டிருந்ததைக் கண்டான்.

ரூபாவின் கேள்விக்குப் பதில் கூற ஹர்நாம் வாய் திறப்பதற்கு முன்பாகவே, லவன் கூறினான்: ''அவன் 'எனிமி'க்கு!''

''விரோதியா? யார் அது?''

''ஜக்கி மாமாதான்! அவர் வந்தால் ஹர்நாமைப் பார்த்து, 'வழியாதே, உளறாதே! ஷட் அப்!' என்றெல்லாம் இட்டுவார்!'' என்றான் குசன்.

''பெரியவனாகப் போன பின் நீயும் தான் அன்பு செலுத்திவிடப் போகிறாயாக்கும்! என்னவோ, போயேன்!'' என்று கூறிக் கொண்டே ஹர்நாம் அங்கிருந்து நடையைக் கட்டினான். இரண்டு குழந்தைகளும் அவனுக்குக் கோணங்கி காட்டிச் சிரிக்கலாயின.

''இதோ பாருங்கள்! உங்களைவிடப் பெரியவர்களுக்கு இப்படி யெல்லாம் கோணங்கி காட்டுவது தவறு!'' என்று ரூபா அவர்களுக்கு அன்போடு எடுத்துச் சொன்னாள்.

அப்பொழுது அவள் பின்னால் யாரோ வந்து நிற்கிறாற்போன்ற பிரமை ஏற்படவே, திரும்பிப் பார்த்தாள். சுஷமா இதழ்களில் முறுவல் நெளியப் பேசாமல் நின்று கொண்டிருந்தாள்.

''உங்கள் விருந்தாளி போய்விட்டாரா?''

## வாக்கு நயம்



**எதையும் குறை கூறும்போது "அது நன்றாக இல்லை" என்று சொல்லக் கூடாது. "எனக்குப் பிடிக்கவில்லை" என்றுதான் சொல்ல வேண்டும். அதுதான் ஆபத்தில்லாத முறை! —விஸ்லர்**

— டைம்ஸ் ஆப் இந்தியா — பாலி

"அவன் விருந்தாளி இல்லை. அஜீத்துக்கு மருமான். பண்ணையில் டிராக்டர் ஓட்டுகிறான்."

"அப்படியா?—நல்ல கலகலப்பான ஆள்!"

"ஆமாமாம். பேச்சைப் பொறுத்தவரையில் கலகலப்பான ஆசாமிதான். ஆனால் நடத்தையில்தான் மகா மட்டம்!" க்ஷமா ஒளிவு மறைவின்றித் தெளிவாகவே கூறினாள். பிறகு அங்கிருந்து போய்க் கொண்டே, "அவனிடம் அதிகமாக வாயைக் கொடுக்காதே!" என்று உபதேசிக்கவும் செய்தாள்.

மறுநாள் அஜீத்தை வழியனுப்ப க்ஷமா விமான நிலையம் வரைக்கும் போனாள். சாரதாவும் அநூப்பும் கூட அங்கே வந்திருந்தார்கள். சாரதா தன் கணவனைப் பற்றி நினைத்து நினைத்து மருகினாள். ஆனாலும் தன் மூக்கு அறுபடக் கூடாதே என்பதற்காக லண்டனுக்குப் போக விரும்பவில்லை.

"அண்ணாவிடம் ஏதாவது சொல்லணுமா?" என்று அஜீத் கேட்கவே, சாரதாவின் கண்களில் நீர் கரந்து விட்டது. ஆனால் நீரில் விழிகளை நீந்த விடாமல் அடக்கிக்கொண்டு, "என்னை அவர் நினைத்தால் உடனே எனக்குத் தந்தி கொடு!" என்றாள்.

"வருவதாக வாக்கு அளித்தால் தந்தி கொடுக்கிறேன்!" என்றான் அஜீத். சாரதா சம்மதத்துக்கு அடையாளமாகத் தலை அசைத்தாள்.

அநூப் அருகில் நின்று அவர்களுடைய பேச்சைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தான். அக்காவின் மனத்தில் ஏற்பட்டுள்ள இந்த மாறுதலைக் கண்டபோது அவனுக்கு வியப்பாக இருந்தது. இப்படி அவன் வியந்து நின்ற வேளையிலே, பின்னாலிருந்து, "ஹலோ!" என்று கூறி அஜீத்தின் தோளில் யாரோ கைவைத்தார்கள்.

எல்லோருமே குரல் வந்த திசையைத் திரும்பிப் பார்த்தார்கள். மிஸ்டர் ராஜனும் மிஸஸ் ராஜனும் அஜீத்தின் அருகில் நின்று கொண்டிருந்தார்கள். சாரதாவும் க்ஷமாவும் முன் சென்று அவர்களை வரவேற்றார்கள். அநூப் மட்டும் அவர்களைக் கண்டு சிறிது கூசினான். அவர்களுடன் கண்ணோடு கண் மோதிப் பேசுவது அவனுக்குச் சங்கடமாக இருந்தது. தங்கள் மகளுக்கு அவனோடு திருமணம் குதிராமற் போகவே அவர்களுமே சற்று விட்டேற்றியாக இருந்தார்கள்.

பேச்சுவாக்கில் அவர்கள் அஜீத்தை வழி அனுப்ப வரவில்லை என்பதும், தங்கள் மகள் அஞ்சுவை வரவேற்க வந்திருந்தார்கள் என்பதும், திருமணமான பின் அஞ்சு தன் கணவனுடன் காஷ்மீருக்குத் தேனிலவு கொண்டாடச் சென்றிருந்தாள் என்பதும் தெரிய வந்தது. இவ்விவரம் காதில் விழுந்தபொழுது அநூப்பின் உடலில் ஒருவித நடுக்கம் ஏற்பட்டது. அவன் இதயம் 'பக்பக்'கென்று அடித்துக் கொண்டது. அவனால் மட்டும் முடியக் கூடிய காரியமாக இருந்தால் அப்போதே விமான தளத்தை விட்டு ஓடியிருப்பான். ஆனால் அந்த நேரத்துக்கு மனத்துள் புழுங்க முடிந்ததே தவிர, அவனால் அந்த இடத்தை விட்டுப் போக முடியவில்லை.

மிஸ்டர் ராஜனும் மிஸஸ் ராஜனும் அஜீத்துடன் எதைப் பற்றி யெல்லாமோ பேசிக் கொண்டிருந்தார்கள். சாரதாவோ மன உளைச்சலுடன் சங்கடப்பட்டுக் கொண்டு அலை பாய்ந்து நிற்கும் அநூப்பைக் கடைக் கண்ணால் அடிக்கொரு தடவை பார்த்துக்கொண்டிருந்தாள்.

காஷ்மீரிலிருந்து வரும் விமானம் 'ரன்வே'யைத் தொட்டு ஓடிவந்து நிலையத்தில் நின்றபொழுது அநூப்பின் இதயம் அடித்துக் கொண்ட வேகத்தை என்னவென்பது? எல்லோருடைய பார்வைகளும் விமானத்தின் கதவு திறப்பதை எதிர்நோக்கி மொய்த்தன. அநூப் யாரும் அறியாமல் அங்கிருந்து நழுவிப் புத்தகக் கடையை நோக்கி நடந்தான். அங்கு சென்று ஓர் ஈடுபாடின்றியே புத்தகங்களைப் புரட்டலானான். அர்த்தமில்லாமல் இரண்டு மூன்று புத்தகங்களை விலை கொடுத்தும் வாங்கிக்கொண்டான். ஆனாலும் அவன் செவிகள் மட்டும் அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதைக் கேட்பதில் லயித்திருந்தன. அஞ்சு கலகலவென்று சிரித்தவாறு என்னென்னவோ சொல்லிக் கொண்டிருந்தாள். அவள் கணவன் எல்லாவற்றுக்கும் 'ஆமாம், ஆமாம்' போட்டுக்கொண்டிருந்தான்.

தூக்கிவாரிப் போட்டாற்போல் அநூப் துணுக்குற்றான். புத்தக அலமாரியில் பொருத்தியிருந்த கண்ணாடியில் அஞ்சு—அவள் கணவன் இருவருடைய முகங்களும் தெரிந்தன. அஞ்சுவின் கணவனைப் பார்த்ததும் அவன் வியப்பில் ஆழ்ந்து விட்டான். சிறிது நேரம் அவன் பேசாமல் அவர்களைக் கண்ணாடி வழியே பார்த்துக் கொண்டிருந்தான். அப்புறம் என்ன நினைத்துக்கொண்டானோ, சட்டென்று திரும்பி நேரே அவர்களிடம் போய் நின்றான்.

"அடே, அநூப்! நீயா?" அநூப்பைப் பார்த்ததும் அஞ்சுவின் கணவன் இருந்த இடத்திலேயே ஒரு குதி குதித்தான். அப்படியே பாய்ந்து அநூப்பை ஆரத் தழுவிக் கொண்டான்.

"சொல்லப்பா சுபாஷ், எப்படி இருக்கிறாய், சொல்லு!" அநூப்பும் கலகலப்பை வரவழைத்துக் கொண்டு பேசினான்.

"இவள்தான் என் மனைவி அஞ்சு!"

"தெரியும்!"

"தெரியுமா?" என்று கேட்ட சுபாஷ், 'எப்படி?' என்றெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கவில்லை. மற்றவர்களுக்கு அறிமுகம்

# ஐடெக்ஸ்
## அழகு சாதனங்கள்










ARAVIND LABORATORIES MADRAS-600 033

ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்

# மிளகு ரசம்
# தக்காளி ரசம்

(REGD.)

( இரு தனி பேஸ்ட்கள் )

மேற்படி பேஸ்ட்களில் ஒரு டீஸ்பூன் அளவு, 130 ml.— 4 அவுன்ஸ் கொதிக்கும் தண்ணீர் அல்லது தங்கள் ருசிக்கு ஏற்றவாறு கலந்தவுடன் உபயோகிக்கலாம். ஈரமற்ற ஸ்பூன் கொண்டு பேஸ்ட்டை எடுக்கவும். பாட்டிலைத் திறந்த பின் சுமார் 4 மாதங்கள் வரை இதை உபயோகிக்கலாம்.

தயாரிப்பாளர்கள் : **M/s. R. S. N. அய்யர் & R. S. G. அய்யர்**

விவரங்களுக்கு

**ஸ்ரீ கணேஷ்ராம் & கோ.,**

46, தம்பு செட்டித் தெரு, (போன் : 20401) சென்னை - 600 001

மற்றும்
"திடீரெக்ஸ்"
தோசை மிக்ஸ்

Dhideerex
(FOR INSTANT PREPARATION)

ஊறுகாய்கள், பப்படம்
'திடீர்' இட்லி மிக்ஸ்
முதலியன

# 35 வயசு ஆனா என்ன முழுகிப் போச்சு? உடம்பு அசதின்னா அதுக்கு ஒகாஸா சாப்பிடுங்க.




வயசு நழுவுதேன்னு மனசை அலட்டிக்கறுங்க ரொம்பப்பேரு. முப்பத்தஞ்சை எட்டினதுமே முகாரி ராகம்: அசதி, பெருமூச்சு! இதுக்கெல்லாம் காரணம்: வயசு முதிர முதிர, வலுவுக்கு மூலாதாரமான சத்துங்க சில, போதுமான அளவுக்கு உடம்புலே உற்பத்தியாகறதில்லே. இந்தக் கவலைக்கெல்லாம் முடிவுகட்டுது ஒகாஸா. இனிமே 35 வயசுன்னு ஆனந்தமா நீங்க ஆண்டுநெறவு கொண்டாடலாம். அப்படி என்ன இருக்கு ஒகாஸாவிலே? 6 பயோ-ரசாயனுதிகள், ஆதாரமான 10 வைட்டமின்கள், 6 உலோக தாதுக்கள், அசுவகந்தா, யோகிம்பைன் மாதிரி மூலிகைச் சத்துக்கள்...எல்லாமாச் சேர்த்து உங்க உடம்பை முடுக்கிவிடும். புதுத் தெம்பைத்தரும். அப்புறம் பம்பரம் தான் நீங்க. எந்த சவாலையும் சுண்டு விரலாலே சமாளிப்பீங்க.

## **ஒகாஸா** பானிக் மாத்திரைகள்

**உடல்நலத்திற்கு மறுமலர்ச்சி**

ஒகாஸா கோ. பிரை லிட். 12, கன்போ ஸ்ட்ரீட், போ. பாக்ஸ நம்பர் 396, பம்பாய்-400 001

Creative Unit A 2183 Tam

செய்து வைப்பதில் மூழ்ந்தான். ''இவனும் நானும் தில்லி ஸ்டீபென்ஸ் கல்லூரியிலே சேர்ந்து படித்தோம்!'' என்றான்.

அநூப்பை அங்கு பார்க்க நேர்ந்ததில் அஞ்சுவுக்கும் மகிழ்ச்சியே. அநூப்புக்கும் அவளுக்கும் முடி போட்டுப் பார்த்து மகிழ முயன்ற பலரது முயற்சியையும் விதி மாற்றி அமைத்து விட்டதைப் பற்றியோ, அஞ்சுவுக்கும் சுபாஷுக்கும் முடி போட்டு அது மகிழ்ந்ததைப் பற்றியோ அங்கே அந்த நேரத்துக்கு யாருமே மூச்சு விடவில்லை. அவரவரும் முகத்தைக் கம்பீரமாக வைத்துக் கொண்டு அந்த எண்ணத்தையே மறக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தனர். அதன் பயனாக இத்தனை நேரமும் தன் உள்ளத்தை ஆட்டிப் படைத்துக்கொண்டிருந்த அச்சத்தை வெற்றி கொண்டு விட்டான் அநூப்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவரவர் பொருள்களைப் பெற்றுச் செல்லுமாறு ஒலி பெருக்கியில் அறிவிப்பு முழங்கவே, சுபாஷ் தன் பொருள்களை எடுத்து வருவதற்காகச் சென்றான்.

ஒருபுறம் அஜீத் க்ஷமாவுடனும் சாரதாவுடனும் சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருந்தான். இன்னொரு புறம் உள்ளத் தவிப்பில் கைகால் ஓடாமல் அஞ்சு நின்று கொண்டிருந்தாள். அநூப்பும் என்ன பேசுவது, எது பேசுவது, எப்படிப் பேசுவது என்று தோன்றாமல் அஞ்சுவைப் பார்த்து மலங்க மலங்க விழித்துக் கொண்டிருந்தான்.

பட்டுப் புடவை சரசரக்க, உள்ளங் கைகளில் மருதாணி செக்கச் சிவக்கக் காட்சி தர, கை கொள்ளாமல் சிவப்பு வளையல்கள் கிலுகிலுக்க, காதுகளிலும், கழுத்திலும் ஏராளமான நகைகளைச் சுமக்க முடியாமல் சுமந்து கொண்டு அஞ்சு புது மணப் பெண்ணாகக் காட்சியளித்தாள். அதைக் கண்டவனுக்கு முதன் முதலில் பிரபுவின் வீட்டில் பார்த்த அஞ்சு நினைவுக்கு வந்தாள். அடேயப்பா! காலோடு தலை என்ன மாற்றம்!

அந்த நினைவில் ஓர் இடைவெட்டு! திடீரென்று அவன் மனக்கண் முன்னே ரூபா தோன்றினாள். ரூபா மணப் பெண்ணானால் அஞ்சுவைக் காட்டிலும் எத்தனை அழகாக இருப்பாள்? அவன் மனம் ரூபாவைச் சுற்றி வளையமிடலாயிற்று.

''நீங்கள் பேசாமல் என்ன யோசித்துக் கொண்டிருக்கிறீர்கள்?'' அஞ்சு நெருங்கி வந்து அநூப்பைத் துணிச்சலாகக் கேட்டு விட்டாள்.

''யோசிக்கவில்லை; பார்த்துக் கொண்டிருக்கிறேன்!'' என்றவன், முறுவலோடு, ''இந்த மணப்பெண் கோலத்தில் நீ எத்தனை அழகாக இருக்கிறாய், தெரியுமா?'' என்றான்.

''அது இப்பொழுதுதான் உங்களுக்குத் தெரிந்ததோ?'' அஞ்சுவின் பேச்சில்தான் என்ன குத்தல்!

''இல்லை... வந்து...''

''விட்டுத் தள்ளுங்கள். கடந்து போன விஷயங்களைப் பற்றி இனி யோசித்து என்ன பயன்? ரூபா எப்படி இருக்கிறாள்? சொல்லுங்கள்!''

''எனக்கு எதுவுமே தெரியாது!''

''தெரியாதா? என்ன சொல்லுகிறீர்கள் நீங்கள்? அவள் உங்கள் காதலில் கசிந்துருகிப் பைத்தியமாகவே அல்லவா ஆகிவிட்டிருந்தாள்!''

''சரியான வார்த்தை. ஒரு காலத்தில் இருந்தாள். இப்பொழுது இல்லை.''

''ஏன்? என்ன ஆயிற்று?''

''விதி மோசம் செய்து விட்டது. அவள் என்மீது கோபித்துக் கொண்டு விட்டாள் என்று எண்ணுகிறேன்!''

''நான் நம்பத் தயாராக இல்லை.''

''வேண்டாம். நானும் நம்ப வைக்கத் தயாராயில்லை.''

''அதற்காகச் சொல்லவில்லை. ரூபா அப்படிப்பட்ட பெண் இல்லை என்று சொல்ல வந்தேன்!'' என்ற அஞ்சு சிறிது நிறுத்தி, ''ரூபா தன்மீது கோபம் கொள்ளுவாளே யொழிய உங்கள் மீது ஒரு நாளும் கொள்ள மாட்டாள்'' என்று கூறினாள்.

தில்லி போகும் விமானம் தயாராக இருக்கிறது என்ற அறிவிப்பு ஒலிபெருக்கியில் வரவே, எல்லோருடைய கவனமும் அஜீத்தின் பால் திரும்பியது. சாரதா தேவி அஜீத்தையும் க்ஷமாவையும் சேர்த்தாற்போல் நிறுத்தி வைத்துப் புகைப்படம் எடுத்துக் கொண்டிருந்தாள். சுபாஷும் அங்கே வந்து சேர்ந்து கொண்டான். அதைக் கண்ட அநூப்பும் அஞ்சுவும் கூட அங்கே சென்றார்கள்.

இத்தனை கூட்டத்திலும் கூச்சலிலும் கூட அநூப்பின் மூளையை அஞ்சு சொன்ன அந்தச் சொற்கள் விட்டு விட்டுத் தாக்கின. 'ரூபா தன்மீது கோபம் கொண்டாலும் கொள்ளுவாளேயொழிய உங்கள்மீது ஒரு நாளும் கொள்ள மாட்டாள்!'

இரவு மணி இரண்டு அடித்தும் க்ஷமா விமான நிலையத்திலிருந்து திரும்பவில்லை

---

## மயிலின் சாயல்; மனத்தின் மணம்

மயிலனைய சாயலில்
ஒயிலைக் கண்டோம்;
மணம் மிகு திரவத்தில்
மனத்தைக் கண்டோம்!

**மேலட்டையில் உள்ள நங்கையின் கரத்தில் இருப்பது விளையாட்டுப் பொம்மையல்ல; மயில் வடிவான அது, எழிலும் மதிப்பும் மணமும் மிக்க ஒன்று. அதனுள் விலையுயர்ந்த வாசனைத் திரவியம் இருக்கிறது. ஒரு விசையை அழுத்தினால் மயிலின் சிறகுகள் விரிய வாசனைத் திரவிய பாட்டில் வெளிப்படும்.** வண்ணப்படம்: எஸ். பிரவீண்குமார்





''எட்டு நாளாச் சாப்பிடலேன்னு சொல்றே. பத்துப் பைசா கொடுத்தா என்ன வாங்கிச் சாப்பிட முடியும்?''

பிச்சைக்காரன்: எத்தனை கிலோ குறைந்திருக்கிறேன் என்று எடையாவது பார்த்துக் கொள்வேன்!

— டைம்ஸ் ஆப் இந்தியா — கே. ஆர்.

---

இரவுக்கே உரிய இருளும் அமைதியும் ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தன. ரூபா அடிக்கொரு தடவை தன் அறையில் உள்ள ஜன்னல் வழியே எட்டி எட்டி வயல்களின் இடையே ஓடிய சண்முகர் சாலையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனால் அவளுக்கு வெகு தொலைவுக்கு வெகு தொலைவு கார் விளக்கின் ஒளியே தெரியவில்லை.

லவனும் குசனும் தூங்கிவிட்டிருந்தார்கள். ஹர்நாம் வெளியே வராந்தாவில் உட்கார்ந்து தூங்கி வழிந்து கொண்டிருந்தான். போகாத பொழுதைப் பேசிப் போக்கலாம் என்றால் ஹர்நாமைத் தவிர வீட்டில் வேறு யாரும் இல்லை. எனவே, ரூபா ஒரு பத்திரிகையை எடுத்துப் புரட்டலானாள். இரண்டொரு பக்கங்கள் படித்தும் பார்த்தாள். ஆனால் அவள் மனம் எதிலுமே நிலைகொள்ளாமல் அறுந்து அறுந்து போயிற்று. எனவே, அதை ஒருபுறம் போட்டுவிட்டு, யோசனையில் ஆழ்ந்தாள். பல நாட்களாக அவளுடைய அம்மாவைப் பற்றிய செய்தியையே காணோம். அவளை நினைத்த பொழுது ரூபாவுக்கு வருத்தம் மேலோங்கியது. அதைத் தவிர்க்க ஜன்னலுக்கு வெளியே பார்வையைச் செலுத்தினாள். காரை எதிர்பார்த்து எதிர்பார்த்துக் கழுத்து வலி காணவே, அவள் ஜன்னல் கதவைச் சாத்திவிட்டுக் குழந்தைகளிடம் சென்றாள். அவற்றின் மீது போர்த்தியிருந்த கம்பளியைச் சரி செய்தாள். சந்திரன் சூரியன் போன்றிருந்த இரு குழந்தைகளும் ஆனந்தமாக உறங்கிக் கொண்டிருந்தன. ஹர்நாமோ வெளிக் குளிர் தாளாமல் விறைத்துக் கொண்டிருந்தான். அவனை எழுப்பிப் போய்ப் படுத்துக் கொள்ளுமாறு கூறினாள்.

ரூபாவுக்கு இப்பொழுதெல்லாம் தனிமை பழகிவிட்டிருந்தது. சுஷமாவின் வாழ்க்கையிலிருந்தும் அவள் எவ்வளவோ கற்றாள். அவளுடைய துணிவையும் தைரியத்தையும் கண்டு ரூபாவுக்கும் அலட்டிக் கொள்ளாமல் இன்பமாக வாழ வேண்டும் என்ற ஆசை பிறந்தது. உட்கார்ந்து உட்கார்ந்து அலுத்துப்போகவே, அவள் சுஷமாவின் அறைக்குச் சென்று டிரான்ஸிஸ்டர் ரேடியோவை முடுக்கி மெல்லிய ஒலியில் பாடல்களைக் கேட்கலானாள்.

பாகிஸ்தான் ரேடியோவில் நாடோடி ரேஷ்மாவின் வாழ்க்கைக் கதை ஒலிபரப்பாகிக் கொண்டிருந்தது. அந்த நிகழ்ச்சி ரேஷ்மாவின் இனிய குரலையும் அவளது பாடல்களையும் இணைத்து வெகு சுவாரசியமாகத் தயாரிக்கப்பட்டிருந்தது. ரூபா அந்தப் பாடல்களின் இனிமையில் லயித்துப் போனாள். இருளும் அமைதியும் சூழ்ந்த அந்த இரவு அவள் உள்ளத்தில் உண்டாக்கியிருந்த அச்சத்தை ரேஷ்மாவின் குரல் இனிமை அபகரித்துக் கொண்டு விட்டது. சிறிது நேரத்துக்கு அந்தக் குரல் அவளை நாடோடிக் கும்பலிடமே இட்டுச் சென்றுவிட்டது. ஆம், அவளும் அந்தக் கும்பலில் ஒருத்தி ஆனாள்.

கவலையற்ற வாழ்க்கை. வீடு வாசல் என்ற பந்தம் கிடையாது. புகலிடம், போக்கிடம் என்ற சொந்தம் கிடையாது. இன்பம்—துன்பம் இரண்டையும் இசைத்து இசையாக வடித்து அதில் லயித்து வாழும் நாடோடிகள் இன்று இங்கிருந்தால், நாளை அங்கு இருப்பார்கள். அதற்கு மறுநாள் எங்கு இருப்பார்களோ?

அதே வாழ்க்கைதான் ரூபாவின் தலையிலும் எழுதியிருந்தாற்போலிருந்தது. அவளும் அந்த நாடோடிகளைப் போல் இன்று இங்கே, நாளை அங்கே என்று போக்கிடம் தேடி அலைந்து கொண்டிருந்தாள். ஆனால் அந்த வாழ்வை நினைத்துப் பார்த்த அந்த வேளையிலே, அவள் மனத்தைச் சுமை ஒன்று அழுத்தியது.

ரேஷ்மாவின் உள்ளத்தைத் தொடும் உருக்கமான பாடல்களை அவள் தன் வாழ்வின் கண்ணாடியெனக் கண்டாள்.

திடீரென்று அவள் கற்பனை உலகிலிருந்து விழித்துக் கொண்டாள். காரணம், எதிர்பாராது எழுந்த ஒலி ஒன்று அவள் கனவின் நிழல்களையே கூட அழித்து விட்டதுதான்.

அப்பொழுதும் ரேடியோவில் ரேஷ்மாவின் உருக்கமான பாடல்கள் ஒலித்துக் கொண்டிருந்தன. அவள் முன்பு கேட்ட ஒலி மீண்டும் கேட்டது. வெளியே யாரோ அழைப்பு மணியை அடிக்கடி அழுத்திக் கொண்டிருந்தார்கள். அவள் உடனே டிரான்ஸிஸ்டரை நிறுத்திவிட்டுப் படுக்கையிலிருந்து எழுந்தாள்.

ஒருவேளை எசமானிதான் திரும்பி வந்துவிட்டாளோ, என்னவோ? எனவே, அவள் அவசரம் அவசரமாக ஹாலைத் தாண்டி வாசற்புறக் கதவை நோக்கி விரைந்தாள். சட்டென்று ஒரு யோசனை. வந்திருப்பது எஜமானிதான் என்று என்ன நிச்சயம்? கதவைத் திறக்கத் துணிவு வரவில்லை. காதைக் கொடுத்துப் பேச்சுக் குரலைக் கேட்க முயன்றாள்.

சுஷமாவின் குரல் என்று தெரிந்த பின் தான் வந்திருப்பவர் வேற்றவர் இல்லை என்ற நம்பிக்கை அவளுக்குப் பிறந்தது. அச்சமின்றிக் கதவைத் திறந்தாள்.

ஆனால், கதவைத் திறந்ததும், அவளை அறியாமல் அவள் வாய் இலேசாக ஒரு கீச்சொலி எழுப்பியது. சுஷமாவுடன் வந்திருந்த நபரைக் கண்டதும் அவள் விழிகள் வியப்பு மிகுதியால் விரிந்தன. வந்தவனுமே கூட அவளை அங்கே கண்டு திகைத்துப் போனான். இவள் இங்கே எங்கே வந்தாள்? — வந்தவனுக்குத் தன் கண்களின் மேல் நம்பிக்கை ஏற்படவில்லை. இவன் எங்கே வந்தான்? ரூபாவுக்கும் தன் விழிகளை நம்பத் தோன்றவில்லை. காண்பது கனவா என்று கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டாள். ஆம், சுஷமாவுடன் வந்திருந்தவன் அனூப்தான். எதிர்பாராத இடத்தில் எதிர்பாராத நேரத்தில் எதிர்பாராத விதத்தில் எதிர்பாராத நபரைச் சந்திப்பதென்றால்...? யாருக்குமே வியப்பு ஏற்படத்தானே செய்யும்? (தொடரும்)

# அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!




பியர்ஸ்—அசல் கிளிசரின் சோப்

கனிவான பியர்ஸ் சோப்பினுல் காத்திடுவீர் உங்கள் மேனி மெருகை. மாணிக்கப் படிகம்போல் மின்னும் ஒவ்வொரு வில்லையிலும் ஒரு நூற்றாண்டு கால சோப்-உற்பத்தி அனுபவம் உள்ளிறங்கியுள்ளது. மிருது மென்மை சொருகும் பியர்ஸ்—தூய்மைக் கொழுந்து—கண்கூடாக நீங்கள் ஊடுருவிப் பார்க்கக்கூடிய உன்னதத் தூய்மை.

**பியர்ஸ் சருமக் களை...**
**கன்னிப் பருவக் களை**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.
லின்டாஸ்-PS. 56-140 TH



# ஃபோட்டோ பேஜ்

## தாய்மை

மேலே :

இரட்டைக் கன்றுகளுக்குப் பாலூட்டும் பசு !

- படம் : பிள்ளாலூர் சிவானந்தம்

பக்கத்தில் :

மேற்கு ஜெர்மனியில் ஒரு விவசாயியின் நாலு பன்றிகள் . ஒரே சமயத்தில் 44 குட்டிகளை ஈன்றன !

[இப்பக்கத்தில் பிரசுரிக்கக் கலையழகோடு கூடிய கருத்தைக் கவரும் புகைப் படங்களை வரவேற்கிறோம். பரிசு உண்டு. பிரசுரத்துக்கு ஏற்கப்படாதவற்றைத் திரும்பப் பெறப் போதிய தபால் தலைகள் அனுப்ப வேண்டும்.]



Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

புதுப்புது வேலைநுணுக்கங்களை நெடு
நாட்களாகப்பணியாற்றி முதிர்ந்த
அனுபவம் பெற்ற பழைய தொழிலாளர்
களிடமிருந்து அறிந்து கொள்வதென்
பது தொழிற்துறையின் மரபாகும்.

ஆனால் நாங்களோ, தொழிலாளர்களுக்
கென்று ஒருங்கிணைந்த வகுப்புப்பாடங்
கள் மற்றும் வேலையோடிணைந்த
பயிற்சி திட்டங்களின்மூலம் பல்வேறு
தொழில் நுணுக்கங்களைப் பயிலுவித்து,
அவர்களை மிகச்சிறந்த தொழிலாளர்
களாக உருவாக்குகிறோம். எங்கள்
வலிமை எஃகில் மட்டுமல்ல, எங்கள்
தொழிலாளர்களிலும் உள்ளது.

ஆண்டுகள் பல உருண்டோடினும்
நாங்கள் இளமை குன்றாது விளங்கும்
காரணம் இதுவே ஆகும்.

எங்கள் வலிமை மேலும் வளர்ந்து
கொண்டே இருக்கிறது.

# எஃகினை
# யொத்த
# வலிமை



டாடா ஸ்டீல்

TIS 6931

